# அருள்

ஸ்ரீ தேவி
சரணம்



ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி
மதுராந்தகம்





தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பரிதாவி மார்கழி (15-12-72) [கருணை 3

## கடவுள் வாழ்த்து

### திருமால் தோத்திரம்

பச்சைமா மலைபோல் மேனி
    பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமர ரேறே
    ஆயர்தம் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போய்
    இந்திர லோக மாளும்
அச்சுவை பெரினும் வேண்டேன்
    அரங்கமா நகரு ளானே

---

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா ரூ. 6-00 | ஆயுள் சந்தா ரூ. 100 | தனிப் பிரதி 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:

நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600087

● முருகன் என்றும் தண்டாயுதபாணி என்றும் சுப்பிரமணியர் என்றும் தமிழ் மக்கள் போற்றும் இறைவனை வட இந்தியாவில் பிரபலப் படுத்தியவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார் ஆவர்.

● பினங்கு, தண்ணீர்மலையாண்டவரின் அடிவாரக் கோயில் 1857ம் ஆண்டு டிசம்பர் மாதம் 12ம் நாள் நாட்டுக்கோட்டை செட்டியார்களால் நிறுவப் பெற்றது. இவ்வாலயத்தின் மேற்புறம் அமைந்துள்ள குன்றும், பூங்காவும் இயற்கையின் எழிலைக் காட்டுகின்றன.

● கங்கையில் நீர் யானைகள் மிகுதி. என்றாலும் அவை காசி எல்லைக்குள் பக்தர்களுக்கு ஊறு செய்வதில்லை.

● திருவையாறு, திருமயிலாடுதுறை (மாயூரம்) திருச்சாய்க்காடு, திருவாஞ்சியம், திரு-விடை மருதூர், திருவெண்காடு முதலிய ஊர்கள் காசிக்குச் சமமாகக் கருதப்படும் தலங்கள் ஆகும்.

● காசி நகரத்திலிருந்து கங்கைநீர், பித்தளைப் பாத்திரம், பட்டுத்துணி, வயிரவர் கயிறு, அபிஷேகத் திருநீறு, சந்தனம், குங்குமம் முதலியன ஏற்றுமதியாகிறது.

● காசி நகரத்துக்கு இராமேஸ்வரம் கோடி தீர்த்தம், காசியில் இறப்பதற்கு முதுமைக் காலத்தில் வருவோர், கங்கைக் கரையில் எரிப்பதற்கு இறந்தவர்கள் உடல் முதலியன இறக்குமதியாகிறது.

● கால்சியம் சத்துக் குறைவதால் வாய் ஓரத்தில் புண், கண் துடித்தல், நமைச்சல் முதலியன ஏற்படும். இதற்கு தினசரி ஆறு தேக்கரண்டி தேன் சாப்பிட்டு வந்தால் போதும். விரைவில் குணம் காணலாம்.

● ஒரு நாளைக்கு இரண்டு வேளை உணவு. நாளுக்கு எட்டுக் குவளை தண்ணீர். நாளுக்கு ஒரு மணி நேர உடற்பயிற்சி. நாளுக்கு இருமுறை வழிபாடு. வாரத்திற்கு ஒருநாள் உபவாசம். இந்த ஐந்து விதிகளையும் கடைப்பிடித்தால் உரம்மிக்க உடல்நலம் ஏற்படும்.

● ரோஜா மலரின் வாசனை இதயத்துக்குப் பலம் அளிப்பது. முகர்ந்தால் சளி மறையும். இதழ்களைத் தின்றால் சுக பேதியாகும். சாற்றை மூக்கில் பிழிந்துகொண்டால் தலைவலி நின்றுவிடும். வெறும் அழகுக்கு மட்டும் சூடுவது அல்ல இது.

● நம் நாட்டிலுள்ள திவ்ய ஸ்தலங்களைத் தரிசிக்கவும், திவ்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவும், சிஷ்யர்களுக்கு ஸத் உபதேசங்களைச் செய்யவும் காஞ்சி ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் 1919ம் வருடம் மார்ச் மாதம் சிவராத்திரி

அமாவாசை அன்று கும்பகோணத்திலிருந்து யாத்திரை புறப்பட்டார்கள்.

● பராசக்தியின் உக்கிர கலையைச் சாந்தப்படுத்துவதற்காக ஆதிசங்கரர் ஆங்காங்கு ஸ்ரீ சக்கர ப்ரதிஷ்டைகளைச் செய்துள்ளதாகக் கூறப்படுகிறது. காசியில் அன்னபூரணி, வட கன்னடத்தில் மூகாம்பிகை, காஞ்சியில் காமாக்ஷி, திருவெற்றியூரில் திரிபுரசுந்தரி, ஜம்புகேஸ்வரத்தில் அகிலாண்டேஸ்வரி ஆக இவ்விடங்களில் ஆதி சங்கரர் ஸ்ரீ சக்கர பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

● பெரிய நகரங்களில் பெரிய கோயில்களும், கிராமந்தோறும் சிறிய சிறிய கோயில்களும், நம் நாட்டில் நமது பண்பாட்டின் சிகரங்களாக விளங்குகின்றன.

● தெற்கில் ஆலயங்களினால் தான் மக்களிடையே பக்தியும் சமய வழிபாடும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நிலைத்து நிற்கின்றன. ஆலயங்கள் தாம் நமது பண்பாட்டின் உறைவிடமாகும்.

● அயலானுடைய மனைவியைத் தப்பு எண்ணத்தோடு காண்பவன் மறுபிறப்பில் பிறவிக் குருடனாகப் பிறப்பான் என்று தரும சாத்திரங்கள் சொல்லுகின்றன.

● இரத்தக் கொதிப்பு என்பது ஒரு தனிப்பட்ட வியாதி இல்லை. உடல் நலம் கெட்டு விட்டதின் அடிப்படையான ஓர் அறிகுறி. ரத்தக் கொதிப்பு நோய் வந்துவிட்டது என்று ஏங்கவோ, அதிர்ச்சி அடையவோ கூடாது. எல்லாவற்றிலும் மிதமாக இருக்க வேண்டும்.

● ஒருவனுக்கு எவ்வளவு தான் பசி, வறுமை, பிணி, மூப்பு, பஞ்சம் இதுபோன்ற தொல்லைகளால் கஷ்டப் பட்டாலும் விரைவில் இவ்வுலகவாழ்க்கையை முடித்துக் கொள்ள மனத்தால் கூட விருப்பப்படுவதில்லை. நீண்ட ஆயுளுடன் வாழவே விரும்புகிறான். மனிதனுக்குள்ள இயற்கையான குணங்களில் இதுவும் ஒன்று.

● தமிழக அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் தம் குடும்பத்தாருடன் இரண்டு தடவை பழநிக்கு வந்து ஸ்ரீ ஞான தண்டாயுதபாணியை தரிசித்தார். ஆண்டவருக்கு தங்க அங்கி சாத்துபடியாகவும் நடந்தன.

● மூலச் சித்தர்கள் பதினெண் பேர்களாவர். அவர்களில் நந்திதேவர் முதல் சித்தர் என்றும் அகத்தியர் இரண்டாம் சித்தர் என்றும் சொல்வர். அகத்தியர் தமிழ்மொழிக்குத் தந்தை என்றும் சொல்வர்.

● கைகால் ஓய்ச்சலுக்கு சுக்கு ஒரு துண்டு மேல் தோல் நீக்கி விட்டுப் பனைவெல்லம் போதிய அளவு, ஏலம் கொஞ்சம் சேர்த்து

காய்ச்சி ஒரு கோப்பை சுடச் சுட சாப்பிட்டால் உடலில் ஒரு புத்துணர்ச்சி தோன்றும். செலவும் குறைவு. இயற்கை வைத்திய மாகும்.

● மைசூர் மாநிலத்தில் அற நிலைய போர்டு எதுவும் இல்லை. சர்க்காரும், சமயம், ஆலயங்கள் விவகாரத்தில் தலையிடுவது இல்லை. மைசூரில் ஹிந்து அற நிலைய கமிஷனர் பதவிகூட மிகச் சாதாரணமாகத்தான் உள்ளது.

● கேரளாவில் தேவஸ்வம் போர்டு சுயேச்சையான ஸ்தாபனம். ஆந்திராவில் சமய கல்வி ஸ்தாபனங்களின் நிதியை வேறு எந்தக் காரியத்துக்கும் திருப்பி விட முடியாது. மடங்கள், டிரஸ்ட்கள் ஆகியவற்றின் உடமைகளை அவை எதற்காக ஏற்படுத்தப் பட்டதோ, அக்காரியங்களுக்கே பயன்படுத்த வேண்டும் என்று ஆந்திர சர்க்கார் கண்டிப்பான தாக்கிதுகளைப் பிறப்பித்திருக் கிறது.

● கண் மங்கினால் உடல் மங்கி விடும். "கண்ணும் காலும் சரியா யிருந்தால் போதும்" என்று பெரியோர்கள் சொல்வதுண்டு. கண்களைப் பாதுகாப்பதில் எல் லோரும் கருத்துச் செலுத்த வேண்டும்.

● நம்மில் ஒவ்வொருவருக் கும் பெயரிடப் பெற்றிருப்பது ஸ்தூல உடம்பிற்கல்ல. சூக்கும உடம்பிற்குத்தான் என்கிறார் மதுரை ஆதீன கர்த்தர் ஸ்ரீ சோம சுந்தர ஸ்ரீ ஞான சம்பந்த தேசிக பரமாச்சார்ய ஸ்வாமிகள்.

● காஞ்சி ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகளுக்கு வேத நாயகம் பிள்ளை கீர்த்தனங்களில் ஒரு விசேஷ பற்று உண்டு. தமிழ்க் கீர்த்தனங் கள் பல பாடியுள்ள பாபநாசம் சிவனுக்கு 1950 ஆவது ஆண்டில் நடைபெற்ற அவரது சஷ்டியப்த பூர்த்தியின் பொழுது 'சிவபுண்ய கான மணி' என்னும் பட்டத்தை ஸ்வாமிகள் கொடுத்து தமிழ் இசையைப் பெருமைப் படுத்தி யுள்ளார்கள்.

● சுமார் 350 ஆண்டுகளுக்கு முன்பே, வேலை மட்டுமே வழித் துணையாகக் கொண்டு நகரத் தார்கள் பழநிக்குக் கால்நடை யாகச் சென்று வந்திருக்கிறார்கள். பழநி யாத்திரையில் வேல் தங்கு மிடமெல்லாம் பூசை போட்டு, அன்னதானம் வழங்கி இருக்கிறார் கள்.

● சென்னை நகரத்தில் 182 அஞ்சல் நிலையங்கள் உள்ளன. சுமார் முக்கால் கிலோமீட்டருக்கு ஒரு அஞ்சலகம் வீதம் உள்ளது. நாளொன்றுக்கு சுமார் 12 லெட்சம் தபால்கள் பட்டுவாடா ஆகின்றன. இவை பதிவு செய்யா தவை.

● கார்த்திகை பௌர்ணமியை ஒட்டி பீஹார் ராஜ்யத் தில் சுமார் 10 லெட்சம் ஹிந்துக் கள் புனித ஸ்நானம் செய்தனர்.

சோனேப்பூரில் கங்கை, கண்டாக் நதி சங்கமத்தில் சுமார் ஐந்து லெட்சம் மக்கள் புனித நீராடினர்.

● மனிதனுடைய சரீரத்தில் முதுகெலும்பு, மூளை, இருதயம் முக்கியமான பாகங்கள். அவைகள் பலம் பெற சில எளிய ஆசனப் பயிற்சிகளைச் செய்து வர வேண்டும். முதுகெலும்பு இல்லாதவன் என்று நம்மைப் பிறர் சொல்லக் கூடாதே? அதற்காகவாவது நாம் ஆசனப் பயிற்சி செய்து வரலாமே.

● ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களை ஞானயக்ஞ முறையில் ஆராதிக்க வேண்டும் என்ற கொள்கையை முதன் முதலில் மேலமாம்பலத்தில் உருவாக்கியது ஸ்ரீ சங்கர பக்தஜன சபாதான். இந்த சபா ஸ்தாபிதம் 20 - 4 - 61.

● இளையாற்றங்குடி கோயில் செட்டி நாட்டிலுள்ள நகரத்தார் கோயில்களுள் பழமை வாய்ந்ததாகும். ஒரு காலத்தில் நகரத்தார் எல்லாருக்கும் அதுவே பொதுக் கோயிலாக இருந்தது. பிறகுதான் 9 பிரிவுகள் ஏற்பட்டன. இளையாற்றங் குடியில் கோயில் கொண்டவர் ஸ்ரீ நித்ய கல்யாணி சமேத கைலாஸ நாதர்.

● நகரத்தார் கோயில்களில் 9 பிரிவுகள் உண்டு. இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், இரணிபூர், பிள்ளையார்பட்டி, நேமம், இலுப்பைக்குடி சூரக்குடி, வேலங்குடி, முதலியவை அவை.

● காசியில் உள்ள நாட்டுக் கோட்டை நகரத்தார் சத்திரம் தொடங்கப் பெற்று இன்றைக்கு சுமார் 110 வருடங்கள் ஆகின்றன. 1863 ல் ருத்ரோத்காரி வருடம் ஆவணி மாதம் 10 ந் தேதியில் அந்த மடம் சில பகுதிகள் புதுப்பிக்கப் பெற்றும், பெரும் பகுதி புதிதாகக் கட்டப் பெற்றும் நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம் என்ற பெயரில் தொடங்கப் பெற்றது.

● தில்லை நடராசர் கோவில் தீட்சிதர்களின் உரிமையாக இருந்து வருவது போல், காசி விசுவநாதர் கோயில் மகந்துகளுக்கு உரிமையாக இருந்து வருகிறது.

● காசியிலுள்ள சிவன் கோவில்களின் எண்ணிக்கை ஆயிரத்து ஐநூறு ஆகும். பிள்ளையார் கோவில்கள் 150. இவை சோட்டா கணபதிகள். கேதார கட்டத்தில் சிந்தாமணி விநாயகரும் டவுன்ஹால் அருகே படா கணபதியும் கோயில் கொண்டுள்ளனர்.

● மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் முப்பெருமைகளையும் முழுமையாகப் பெற்ற நாசிக் பஞ்சவடியில் 1863ல் பம்பாய் நகரத்தார்கள் கண்கண்ட கடவுளாய், கலியுக வரதனாய் விளங்

கும் தண்டாயுத பாணிக்கு அழகுறக் கோவில் அமைத்தனர். ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரத்தின் ஆட்சியில் இக்கோவிலில் எக்குறையுமின்றி பூசைகள் நடைபெற்று வருகின்றன.

● காஞ்சி ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் கதர் ஆடைகள் விற்பனைக்கு வந்த சுமார் 1918ம் வருடம் முதல் கதர் வஸ்திரத்தையே உடுத்து வருகிறார்கள். எவ்வளவு முரட்டு வஸ்திரமானாலும் கதர் அணிவதில் ஸ்வாமிகள் மிகுந்த மகிழ்ச்சி அடைவார்கள்.

● நோய்களில் மலச்சிக்கலும், அஜீரணமும் மிகக் கொடியவை, ஏனெனில் இவற்றிலிருந்தே பல நோய்களும் உற்பத்தியாகின்றன. பெரும்பாலும் கிராமங்களைவிட, வசதியாக உள்ள நகரங்களிலேயே இந்த நோய்கள் அதிகமாகக் காணப்படுகிறது.

● எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக வந்திருக்கிற கர்மாக்களை நமக்கு நூறுருபாய் சம்பளமாய் விட்டதால் செய்யமுடியாதென்று சொல்வது பெரிய விபரீதம். உத்தியோகம் தன்னை ஆகாஸத்தில் தூக்கிவிட்டதாக நினைத்துக் கொண்டு விடக் கூடாது.

● பசு சௌக்யமாக இருந்தால் உலகமே அதனால் சௌக்யமடையும். பசுவினால் சகல ஜனங்களும் சௌக்ய மடைகிறார்கள் என்பதினால்தான் கோபூஜையை பிரதானமாகச் சொல்லி இருக்கிறது.

● சென்னையில் யோகாசன ஆலயத்தார் வாரத்தில் நான்கு நாட்களில் தாயுமானவர் பாடல்களுக்கு விளக்கம் கூறியும், மாத இதழில் தாயுமானவர் பாக்கள், உரை விளக்கம், கட்டுரைகள் பிரசுரித்தும் வருகிறார்கள். பள்ளி மாணவர்களுக்கும், பெரியோர்களுக்கும், யோகாசனங்கள் கற்றுக் கொடுத்து வருகிறார்கள். சித்திரைத் திங்களில் தாயுமானவர் பாக்கள் மனனம் செய்தவர்களுக்கு பரிசுகள் வழங்கியும் வருகிறார்கள்.

● எலுமிச்சம்பழச் சாற்றை கைகால் உடலில் தடவி சிறிது நேரம் வைத்திருந்து குளிக்க ஆரோக்யமும் சுறுசுறுப்பும் உண்டாகும். மேலும் கை கால்கள் மிருதுவாகும். துர் நாற்றம் நீங்கும்.

● எல்லோரும் தினந்தோறும் அவரவர்கள் அநுஷ்டானம் முடிந்த பிறகு இரண்டு நிமிட நேரம் மௌனமாக நம்பிக்கையுடன் அம்பாளை மனத்தில் தியானித்து வந்தால் போதும் கஷ்டம் வராது. அப்படி வந்தாலும் பொறுத்துக் கொள்ளக் கூடியதாகவே இருக்கும்.

● வெற்றிலையின் காம்பு, நுனி, நரம்பு இவைகளை நீக்கி கட்டை விரலால் சுண்ணாம்பு தடவி பாக்கை முதலில் போட்

டுக் கொண்டு தாம்பூலம் போட வேண்டும்.

● தீபம், கற்பூரம், ருத்திராக்ஷம், புஸ்தகம், சங்கம், பவித்ரம் இவைகளைத் தரையில் வைக்கலாகாது.

● திருவாசகத்திலே ஒரு சிறந்த பகுதி திருவெம்பாவை. இது மார்கழியில் ஓதவேண்டிய சிறப்புடையது.

● மனிதனைப் புனிதனாகச் செய்வது ஆலயம். தெய்வ அருளாற்றல் அங்கே நிலவிக்கொண்டு இருக்கின்றது. அங்கு சென்று வழிபடுவோரது வினைகளாகிய பஞ்சுப் பொதிகள் திருவருளாகிய அனற்பொரியால் வெந்து சாம்பராகின்றன.

● சைவ சமயம் எல்லாச் சமயங்களையும் தனக்கு அங்கமாகக் கொண்டு தாயகமாக விளங்குவது. எந்தச் சமயத்தையும் புறக்கணிக்காது தழுவி நிற்கும் சமரச முடையது.

● குடும்பம் ஒரு தருவைப் போன்றது. அதற்கு வேர் மனைவி. அடிமரம் கணவன். கிளைகள் மக்கள். இலைகள் அன்பு. மலர்கள் கருணை. பழங்கள் தருமம்.

● கடன் வாங்குவது என்பது இந்தக் காலத்தில் ஒரு சாமர்த்தியமான செயல். எல்லாராலும் எளிதில் கடன் வாங்கிவிட முடியாது. கடன் வாங்குவது பெரிய காரியமல்ல. வாங்கிய கடனைத் தீர்த்துவிட வேண்டும். ஒரு சிறிது மிச்சமாக விட்டு வைத்தாலும் வட்டி குட்டி போட்டுப் பெருகி விடும்.

● தெய்வயானையை மணந்து உல்லாசமாக விளங்கும் தலம் — திருப்பரங்குன்றம். சிந்தனையாகிய அலைகள் வந்து திருக்கோயிலில் மதிற் புறத்தே ஓய்ந்து கவலை தேய்கின்ற திருத்தலம் திருச்செந்தூர். ஞான தண்டபாணியாகக் காட்சி அளிக்கும் யோக தலம் திருவாவினன் குடி. தந்தைக்கு இதமாக ஓம் என்பதன் உட்பொருளை உபதேசித்த தலம் திருவேரகம். சல்லாபமாகக் குறிஞ்சி நிலமாகிய மலைகளில் விளையாடுகிற தலம் குன்று தோறாடல். விநோதம் — பொழுதுபோக்காக ஞானப்பழம் உதிர்கின்ற சச்சிதானந்தச் சோலையாக விளங்குவது பழமுதிர்சோலை.

● இந்துக்களின் கோவில்களில் எத்தனை இறையுருவங்கள் உண்டோ அவை அனைத்துக்கும் காசியில் கோவில்கள் உள்ளன.

● காசியில் கங்கைப் படித்துறைகளில் பசுவைக் கட்டி வைத்து, ஒரு கட்டுப் புல்லையும் சற்றுத் தொலைவில் வைத்திருக்கிறார்கள். பத்து காசு கொடுத்து புல்லை வாங்கிப் பசுவுக்குக் கொடுத்து புண்ணியம் பெறலாம்.

● காசிவிசுவநாதருக்கு நூற்றி எழுபது ஆண்டுகளாக

முக்காலமும் நகரத்தார்கள் தங்கள் செலவில் பூஜை செய்து வருகின்றனர். அந்தப் பூஜைகளுக்குரிய எல்லாப் பொருள்களும் நகரச் சத்திரத்திலிருந்து நாள் தோறும் இருமுறை உரிய இசைக் கருவிகள் முழங்க, விசுவ நாதர் கோவிலுக்கு எடுத்துச் செல்லப் பெறுகின்றன. இந்த நிகழ்ச்சிக்கு சம்போ என்று பெயர்.

● காமகோடி பீடத்திற்குப் பல க்ஷேத்திரங்களில் மடங்கள் ஏற்பட்டுள்ளன. அவைகளில் திருவானைக் காவில் உள்ள மடத்தை மிகவும் பழமையானதாகச் சொல்லுகிறார்கள். விஜயரங்க சொக்கநாதரால் மடத்திற்கு அளிக்கப்பட்ட தாமிர சாஸனத்தில் இச்செய்தி கூறப்பட்டுள்ளது.

● வியாபாரத்தை அவரவர்கள் லாபத்தை உத்தேசித்துச் செய்கிறார்கள் என்று நினைக்கக் கூடாது. வியாபாரம் பொதுப் பிரயோஜனத்தை உத்தேசித்ததே தவிர சொந்தப் பிரயோஜனத்தை உத்தேசித்து அல்ல.

● ஒவ்வொருவருக்கும் மிகவும் அவசியமான தேவைகள் கொஞ்சமே. இருக்க இடம், உடுக்க உடை, உண்ண உணவு இவை மூன்றும் எல்லாருக்கும் கிடைக்க வேண்டியது. இவை கிடைத்துவிட்டால் கவலையற்று வாழலாம்.

● உண்ட உணவு ஜீரணமாகாமலிருப்பதற்குப் பெயர் அஜீரணமாகும். நாம் சாப்பிடும் ஆகாரத்தை மென்று மெதுவாக சாப்பிடாததினாலும், போதிய சுத்தமான தண்ணீர் சாப்பிடாததுமே அஜீரணத்துக்குக் காரணமாகும்.

● வாரம் இருமுறை, அல்லது அவசியம் ஒருமுறை சனிக்கிழமையாவது நல்லெண்ணெய் தேய்த்து, ஊறி, நீராட வேண்டும். நோய் வராது உடலைப்பாது காக்க தைலஸ்நானம் அவசியமாகும்.

● வடக்குப் பக்கமும், கிழக்குப் பக்கமும் தலைவைத்துப் படுக்கக் கூடாது. அப்படிப்படுத்தால் வறுமையும், நோயும் ஏற்படும்.

● கறையான் அரிக்காததும், காளான் உண்டாகாததும் இரும்புத்துரு ஏறாததுமான ஒரே ஒரு மரம் தேக்குதான். வேறு மரம் எதுவும் கிடையாது.

● தங்களுக்கு வேண்டிய சந்தர்ப்பங்கள் இருக்கிறதா என்று பார்த்து, அறிந்து அப்படி இல்லையானால் அதை உருவாக்குகிறவர்கள் தான் வாழ்க்கையில் முன்னுக்கு வருகிறார்கள்.

● சிறிது நெல்லிப்பொடியை ஒரு டம்ளர் நீரில் போட்டால் சிறிது நேரத்தில் கலந்து ஊறி விடும், இரவு உணவுக்குப்பின்

இதை அருந்தி வந்தால் கடின மான மலச்சிக்கலும் நீங்கும்.

● கங்கை இந்தியாவின் மிகப் பெரிய ஆறு. உலகப் பெரிய ஆறு களுள் ஒன்று. சமயத் தொடர் புடையது. இந்துக்களால் புனித ஆருகப் போற்றப்படுவது இதன் நீளம் 1557 மைல்.

● கங்கை கீழே இறங்கிய தாகக் கூறப்படும் நாள், வைகாசி சுக்கிலபட்ச, திருதியை, செவ் வாய்க் கிழமை, அஸ்த நட்சத் திரம்.

● உப்பும் சர்க்கரையும் குறை வாக உண்ண வேண்டும். காரமும் அதே போன்று குறைவாகவே இருக்க வேண்டும். நாவுக்கு அடி மையாகவே கூடாது.

● நல்ல உணவு, நல்ல சிந் தனே, நல்லவர்கள் நட்பு என்றும் உடல் நலத்தைத் தரும். தினசரி சிறிது நேரம் ஓய்வாக இருந்து நல்ல நூல்களைப் படித்தால் மன சுக்கு நிம்மதி கிடைக்கும்.

● சாமவேதம் இறைவனுக்கு மிக உகந்த வேதம். இதில் உள்ள மந்திரங்களின் எண்ணிக்கை 1875 ஆகும். பெரும்பாலான சாமவேத மந்திரங்கள் ருக்வேத மந்திரங்கள் ஆகும். இசைக் கலைக்கு சாம வேதம் மூலம் எனவும் சொல் வார்கள்.

● புதிதாகக் கோயில் கட்டு வது சிறந்தது தான். ஆயினும் பழுதாய்ப்போன ஆலயங்களுக் குத் திருப்பணி செய்வதை மிக வும் சிறந்தது எனப் பத்ம ஸம் ஹிதை கூறுகிறது.

● கோவிலுக்குள் அர்ச்சகர் கள் தரும் பூ, குங்குமம், துளசி முதலிய பகவத் பிரஸாதங்களைக் கீழே சிந்தவிடக் கூடாது. மிச்ச மிருந்தால் மக்கள் கால்படாத இடத்தில் அவைகளைச் சமர்ப்பிக் கலாம்.

● நெல்லிச் சாற்றில் தேன் கலந்து அருந்தினுல் பித்தம் குறை யும். நெல்லிப்பொடியில் தேன் கலந்து உண்டாலும் பித்தம் நீங் கும். தேன் இல்லாவிடில் வெல் லம் கலந்து கொள்ளலாம்.

● பெண் ஆசை காரணமாக, இராவணன் கெட்டான். மண் ஆசை காரணமாக துரியோத னன் கெட்டான்.

● அறுபத்து நான்கு சக்தி பீடங்களில் முதல் பீடமாக மாக விளங்குவது மதுரை. மேனுட்டவரும் கண்டு அதிசயிக் கும்படி நகரின் அமைப்பு அமைந் துள்ளது. திருமலைநாயக்கர் மஹா லும், காந்தி மியூசியமும், வைகை நதியும், வண்டியூர் தெப்பக்குள மும் ஊருக்கு எழில் கூட்டுகின் றன.

● புண்ணிய ஆருகிய கங்கை இமயமலையிலிருந்து தவழ்ந்து பூமி யைத் தொடும் இடம் அரித்துவா ரம் எனப்படும் எழில் மிக்க நகர மாகும். கும்பமேளா என்னும்

திருவிழா 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை 40 லெட்சம் மக்கள் கூட்டம் கூடிக் காணும் வகையில் நிகழ்கிறது.

● அரித்துவாரிலிருந்து ஏறத்தாழ 15 மைல் தொலைவில் ரிஷிகேஷ் இருக்கிறது. தொன்று தொட்டு துறவிகள் வாழ்ந்த ரிஷிகேசில் தான் சுவாமி சிவானந்தர் அமைத்த ஆசிரமம் இருக்கிறது.

● காசி விசுவநாதர் கோவிலில் அர்த்தசாமத்திலும், உச்சிக் காலத்திலும் நகரத்தார்கள் பெயருக்கு ஒவ்வொரு நாளும் அஷ்டோத்ர அர்ச்சனை நிகழ்கிறது.

● கலியுகவரதனும், ஞான பண்டிதனும், போதவன் புகழ் சாமியும், பவரோக வைத்திய நாதனும், கண்கண்ட தெய்வமும், கருணைக் கடலாகிய முருகப் பெருமானின் திருவருளைப் பெறுவதற்குரிய நாள் குமார ஷஷ்டியாகும்.

● குமார ஷஷ்டி நல்விழா சமீபத்தில் மதுரையில் ரெங்கராஜன் சித்த டுடோரியல் காலேஜ் கட்டிடத்தில் ஸித்தாஸ்ரம அக்ரபூஜிதர் ஸ்ரீ ஸித்த நரசிங்கராவ் அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாக நடந்தது.



# சேவையே மேலான பாக்கியம்



ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

மனிதனுகப் பிறந்தவனுக்கு எவ்வளவோ பாக்கியங்கள் உண்டு. ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகையான பாக்கியம். எல்லாப் பாக்கியங்களுள்ளும் மேலான பாக்கியம் பிறருக்குச் சேவை செய்வதே.

எல்லாரும் பரிபூரண தத்துவத்தை உணர்ந்து பூர்ண நிலேயில் ஆனந்தம் அடைந்து விட்டால் அப்போது அவர்களுக்குச் சேவை வேண்டியிராது. கொஞ்சம் கீழ் நிலேயில் இருக்கையில், பரிபூர்ண ஆனந்த நிலே அடையும் நிலேயில் குறைகள் இருந்து நாம் கஷ்டப் படுகிறேம் என்று எண்ணுகிற நிலேயில், அவர்களுக்குச் சேவை தேவைப்படுகிறது.

உதாரணமாக, கூட்டத்தில் குழந்தை காணுமற் போனுல், தாய் கஷ்டப்படுகிருள். தாய்க்குக் குழந்தையைத் தேடிக் கொடுப்பது ஒரு சேவை. ஞான நிலேயில் குழந்தைகளாக இருக்கிறவர்களுக்குப் பல கஷ்டங்கள். குழந்தைப் பருவத்தில் பிறர் சேவை வேண்டியே இருக்கிறது. அநேக ஜன்மங்களில் ஞானம் முதிர்ந்த பரிபூர்ண நிலே அடையும் வரை பிறருடைய சேவை வேண்டியே இருக்கிறது.

நமக்கு எத்தனே கஷ்டங்கள்! வேலேகளில் தொந்தரவு, அரிசிக் கஷ்டம் இவையெல்லாம் நீங்க வேண்டும் என்று முயலுகிறேம். கஷ்டம் நீங்க உதவுவது நம் கடமை. நம் குடும்பத்துக்குச் சேவை செய்கிறேம். நமக்கும் நம் குடும்பத்துக்கும் சம்பந்தம்

இருக்கிறது. நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கும் சேவை செய்வது பிலாக்கியம்.

குடும்பம் மட்டுமின்றி ஊர், நாடு, தேசம், சர்வ தேசம் என்று எல்லா நிலைகளிலும் நாம் நம் சேவையைப் பெருக்கிக்கொண்டு போகவேண்டும். ஊரில், நாட்டில், உலகத்தில் யார் யார் கஷ்டப்படுகிறார்களோ அவர்களுக்கெல்லாம் சேவை செய்ய வேண்டும். அது கடமை.

மனிதர்களுக்கு மட்டுமின்றி, மாடுபோன்ற மற்ற ஜீவன்களுக்கும் சேவை செய்ய வேண்டும். மந்திரத்தோடு சேர்த்துச் சில வஸ்துக்களைக் கொடுப்பது, இந்த உலகம் மட்டுமின்றி மற்ற உலகங்களில் உள்ளவர்களுக்கும் செய்யும் சேவையாகிறது.

நாம் நகரத்தில் இருக்கிறோம் மாட்டுக்குப் போட நமக்குப் புல் கிடைக்காது. கோஸம்ரக்ஷணத்துக்கு உதவக்கூடிய செடி, ஏதாவது ஒரு வகைச் செடி, அகத்திக் கீரை போன்றதை வேலி கட்டி வளர்த்து மாட்டுக்குத் தரவேண்டும். 'கோக்ராஸம்' அதாவது 'பசுவுக்கு ஒரு கவளம்' கிராஸம் என்பதிலிருந்துதான் 'கிராஸ்' (ஆங்கிலம்) வந்ததோ என்னவோ! எப்படியோ எங்காவது புல்லாவது வாங்கி நம் மாட்டுக்கோ, பிறருடைய பசுவுக்கோ 'கோக்ராஸம்' என்ற இந்தத் தர்மத்தைச் செய்ய வேண்டும். மாடுகள் எலும்பும் தோலுமாகக் கஷ்டப்படுகின்றன. புல் இடுகிற சேவை ஒன்று; இதுபோல இன்னும் யார் யாருக்கு என்ன கஷ்டம் இருக்கிறது என்பதை விசாரித்து நம்மால் ஆன உதவியைச் செய்ய வேண்டும்.

சேவை செய்யும்போது துஷ்ட நிக்ரஹம் சிஷ்டபரிபாலனம் என்ற கிரமத்தில் துஷ்ட நிக்ரஹம் செய்ய நேரிட்டாலும் அதுவும் செய்யத் தக்கதே. கஷ்டப்படுவதற்குக் காரணத்தை விசாரித்து, அதற்கு நிவிருத்தி தேட வேண்டும்.

நாம் சேவை செய்ய விரும்புவது போலவே இன்னும் சிலரும் சேவை செய்ய ஆசையுள்ளவர்களாக இருப்பர். அவர்களையும் சேர்த்துக் கொள்ளலாம். சேவை செய்ய விரும்பும் எல்லாரும் சேர்ந்து சங்கமாக, ஒரே அபிப்பிராயமாக இருந்து சேவை செய்ய வேண்டும்.

ஸத்யம், நியமம் (கட்டுப்பாடு) இருந்தால்தான் சங்கம் உடையாமல் இருக்கும். சங்கமாகச் சேவை செய்வோருக்குச் சத்தியம், நியமம், தைரியம், ஊக்கம் இவை இருந்தால்தான் பரோபகாரம் செய்ய முடியும். பல பேர் கஷ்டப்படுகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குச் சேவை செய்வதற்கு நாம் நம் காலத்தைச் செலவிட வேண்டும். பொழுது போக்குக்காக எங்கெங்கோ போகிறோம். ருசியாகத் தின்னும்

இடம், கிளப்புகள் போன்றவற்றில் பொழுதை வீணுக்காமல் பிறருக்குச் சேவை செய்வதில் ஈடுபட வேண்டும். இன்பப் பொழுது போக்கில் பொழுதை வீணுக்காமல் சேவையில் ஈடுபடுத்துவதே கடமை. இதைக் கடமையாகச் செய்து வர வேண்டும்.

ஸ்ரீ கிருஷ்ணன் குழந்தையாக இருந்து நிறைய விளையாடினுன். பாலகிருஷ்ணனுக இருந்து விளையாடினவன் கிருஷ்ணனே. தத்துவ உபதேசம் செய்தவனும் கிருஷ்ணனே. விளையாடும்போதே சேவையும் செய்தான். யார் யார் கஷ்டப்பட்டாலும் அதையெல்லாம் போக்கினுன்.

கிருஷ்ணன் உயிருக்கே பல ஆபத்துக்கள் வந்தன. அவற்றை எல்லாம் போக்கி உலகத்தை ரக்ஷித்தான். மலையைத் தூக்கிப் பிடித்து, காளியன் மடுவில் குதித்து, அவன் விளையாட்டாகவே எல்லாருக்கும் நன்மையான சேவை செய்தான். அவனைப் போல் விளையாடினவர் யாருமில்லை; தத்துவ உபதேசத்திலும் அவனைத் தவிர யாருமில்லை. கொஞ்சமும் பற்றுதலின்றிச் சேவை புரிந்த அவதாரம் கிருஷ்ணுவதாரம்.

ராமாவதாரத்தில் ஆஞ்சநேயரும் சேவையைப் பிரதானமாக எண்ணி யார் யாருக்கு என்ன செய்ய வேண்டும் என்று தேடினுர்.

நாமும் பகவானையும் ஆஞ்சநேயரையும் கருத்தில் கொண்டு ஒவ்வொரு நாளும் 'இன்று என்ன சேவை செய்வது?' என்று தேடிச் செல்ல வேண்டும். சேவை கிட்டாத நாள் 'தீட்டு' (தூய்மையற்ற) நாள் என்று கருத வேண்டும்.

சேவை செய்வதற்குச் சாந்தம் வேண்டும்; தைரியம் வேண்டும். மலை புரண்டாலும் சிரித்துக் கொண்டே சாந்தியோடு அமைதியோடு சேவை புரியும் தீரம் வேண்டும். ஆஞ்சநேயருக்கு ஒவ்வொரு ராஜ்யத்தில் ஒவ்வொரு பெயர். அவரை வழிகாட்டியாகக் கருதி, அவரை நினைத்துச் சேவையே பிரதானமாகச் சங்கமாக இருந்து நாம் பணிபுரிய வேண்டும்.

பகவான் கூர்மம், வராகம், நரஸிம்மம் போன்ற பல அவதாரங்களை எடுத்திருக்கிறுன். ஆனுல் மற்ற அவதாரங்களில் செய்யாத பல செயல்களையும் சேர்த்து, எல்லாச் செயலையும் கிருஷ்ணுவதாரத்தில் செய்திருக்கிறுன். அவனை நினைத்து நாம் சேவையில் ஈடுபட வேண்டும்.

●

# திருவெம்பாவை



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

திருவாசகத்திலே ஒரு சிறந்த பகுதி திருவெம்பாவை. இது மார்கழியில் ஓதவேண்டிய சிறப்புடையது.

மாணிக்கவாசக சுவாமிகள் திருத்தில்லையிலே ஒருபுறம் பர்ணசாலே அமைத்து அதில் இருந்து தவம் புரிந்து கொண்டிருந்தார்.

அம்பலவாணர் ஒரு தவமுனிவராகச் சென்று மாணிக்கவாசகரைக் கண்டு ''அன்பரே! தாங்கள் பாடியருளிய திருவாசகத்தைச் சொல்லும்; நான் எழுதிக் கொள்ளுகிறேன்'' என்ருர். அவருடைய விருப்பப்படியே மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தைக் கூறினுர்.

எல்லாம் எழுதி முடிந்தபின் ஆனந்தக் கூத்தர், ''அன்பரே! பாவை பாடிய வாக்கினுல் கோவை பாடும்!'' என்று அருளிச் செய்தார்; இங்கே பாவையென்பது திருவெம்பாவைக் குறிக்கும். திருவாசகத்துக்குள் 'பாவை பாடிய வாய்' என்று இதனைச் சிறப்பித்துக் கூறினுர். எனவே திருவெம்பாவை ஒப்புயர்வற்ற உன்னத வாக்கு.

இதற்கு மற்றொரு சிறப்பும் உண்டு. மார்கழி மாதத்தில் பன்னிரு திருமுறைகளேயும் திருக்காப்பிட்டு வைத்துவிட்டு, இத்திருவெம்பாவை ஒன்றை மட்டுமே ஓதவேண்டும். இது இன்றும் நிகழ்கின்ற ஆன்றோர் மரபு.

மார்கழி மாதம் சிறந்த மாதம். கல்வியிற்சிறந்தவர் சூரியமூர்த்தி; அவர் தேவ குருவாகிய வியாழ பகவானுடைய வீடாகிய தநுர் ராசியில் சஞ்சரிக்கின்ற மாதம் மார்கழி. அதனால் அம்மாதம் உயர்ந்தது.

கண்ணபிரான் கீதையில் 'அர்ஜுனா! நான் மாதங்களில் மார்கழி மாதமாக இருக்கிறேன்' என்கிறார். இம் மார்கழி, தீட்சைக்கு உரிய மாதம்.

இனி பூலோக கைலாசமாகிய சிதம்பரத்தில் திருவாதிரைத் திருவிழாவும், பூலோக வைகுந்தமாகிய ஸ்ரீரங்கத்தில் ஏகாதசி நல்விழாவும் நடைபெறுவது மார்கழியில் தான்.

உத்தமமான பிறப்பெடுத்த நாம் இத்தகைய புனிதமான மார்கழி மாதம் விடியற்காலையில் கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காது, துயில் எழுந்து, நீராடி, நீறாடி, திருவெம்பாவை திருப்பள்ளி எழுச்சி என்ற இரு நூல்களையும் பக்தி பரவசத்துடன் பாராயணம் புரிதல் வேண்டும். அங்ஙனம் புரிவோர்க்கு ஆணவ இருள் நீங்கி சிவஞான ஒளி உண்டாகும்.

மாணிக்கவாசக சுவாமிகள் திருவண்ணாமலையில் அருளிச்செய்தது திருவெம்பாவை. நவசக்திகளும் தமக்குள் துயில் உணர்த்தும் தன்மையை உணர்த்துவது.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்
பெரும் ஜோதியை
யாம்பாடக் கேட்டேயும் வாள்
தடங்கண்
மாதே வளருதியோ? வன்செவியோ
நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள்வாழ்த்திய
வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி
மெய்ம்மறந்து
போதுஆர் அமளியின்மேல் நின்றும்
புரண்டு இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்
என்னே என்னே
ஈதே எந்தோழி பரிசு? ஏல் ஓர்
எம்பாவாய்.

இறைவன் ஜோதி மயமானவன். அருட்பெருஞ் ஜோதி. இன்ன காலத்திலே தோன்றிய ஜோதி என்ற காலவரம்புக்குஅது உட்படாதது. அதற்கு முடிவுமில்லை. முதலும் முடிவும் இல்லாத அருமை பெருமை யுடையது.

என்ன அருமையான அமுத வாக்கு! தித்திக்கின்ற தேனமுத வாக்கு.

ஒளியும் அகலமும் படைத்த கண்ணுடையவளே என்று அழைத்ததனாலும், இப்போது துயில்கின்ற போது இருளும் குவிதலும் பூண்டிருக்கின்ற கண் என்பதனைக் குறிப்பிடுகின்றது. உய்த்துணர வைத்தல் என்ற உத்தி.

உனது மென்மையான காது என்ன வன்மை பெற்றதா?

நாங்கள் வீதியில் தேவதேவனுகிய சிவபெருமானை வாழ்த்திய ஒலியைக் கேட்டமாத்திரத்தில,

அன்புள்ள ஒருத்தி ஆனந்த மேலிட்டாலும் அன்பின்உணர்ச்சியாலும் விம்மி விம்மி தன் உடம்பை மறந்து மலர் நிறைந்த படுக்கையின் மீது புரண்டு தன் வசம் இழந்து ஒன்றையும் உணராது கிடக்கின்ருள். [இதோ பார் இந்த அன்பின காட்சியை]

எமது தோழியே! இது வல்லவா சிவபக்தி? என்ன அதிசயம்? நீ பார்!

இத் தன்மையை நீ ஏற்று ஆராய்ந்து பார்.

எமது பாவை போன்றவளே!

இத்தகைய அற்புதமான இனிய பாடல்களாகிய திருவெம்பாவையை அன்பர்கள் மார்கழி மாதம் வைகறையில் தவருது ஓதி அகம் புறம் என்ற இரு இடங்களிலும் நின்ற சிவனருளால் இகம் பரம் என்ற இருமை நலன் களையும் பெறுவார்களாக.



# கேள்வியும் பதிலும்



ஸ்ரீகாமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி
ஸ்வாமிகள்

ஏதாவது ஒரு விக்ரஹத்தின் மூலம் இறைவனை நாம் வழிபடலாமே? எதற்கு இத்தனை விக்ரஹங்கள் ?

சில அசுரர்கள், ராட்சசர்கள் இறைவனைத் தவிர மற்றவர்களால் தனக்கு மரணம் சம்பவிக்கக் கூடாது என்று வரம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க பிரும்மா விஷ்ணு, சிவன் இவர்களோ, அல்லது இவர்களின் அம்ஸமான ராம, கிருஷ்ணாதி அவதாரங்களோ, இவர்களின் சக்தியாக விநாயகர், சுப்ரமணிய ஸ்வாமி முதலியவர்களோ, அந்த ராட்சஸர்களின் கொட்டத்தை அடக்கி தேசத்தின் தர்மத்தையும், நன்மையையும் நிலை நாட்ட வந்த மூர்த்திகள்.

ஆகவே பல காரணங்களை முன்னிட்டு பல உருவ வடிவங்களை ஏற்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. ஆனாலும் இவ்வளவு வடிவங்களில ஒரு வடிவத்தை வழிபட்டாலும் இறைவனின அருள் நிச்சயமாய் உண்டு.

கோயில்கள் வழிபாட்டு முறையில் எப்போது எதற்காக தோன்றிற்று?

வழிபாட்டு முறைகள் அனாதியாக வந்து கொண்டிருக்கின்றன. அநேக மஹா புருஷர்களாலும், மகரிஷிகளாலும், ஞானிகளாலும், இந்திரன் முதலிய தேவதைகளாலும், பிரும்மா, சிவன், விஷ்ணு முதலிய மூர்த்திகளாலும், அவைகளின் சக்தி வடிவமாகிய சரஸ்வதி, பார்வதி, லக்ஷ்மி முதலியவர்களாலும் அருவமான இறைவனை வழிபட்டு அனுபவித்து ஆனந்தமடைந்த இடங்கள் தாம் நமது கோயில்கள்.

ஆகவேதான் ஒவ்வொரு கோயிலுக்கும், ஒவ்வொரு ஸ்தல

மஹாத்மியம் இருக்கிறது. அதில் எவர் எவர் வழிபட்டு என்னென்ன பயன்கள் எந்தெந்தக் காலத்தில் அடைந்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் படி பார்க்கும்போது பலயுகங்களுக்கு முன்னால் கூட பலபேர் வழிபட்ட கோயில்கள் இன்றும் நம்மிடையே இருக்கின்றன. முன் யுகங்களில் மனோபலம் நிறைந்திருந்ததால், மானசிகமாகவே உருவ வழிபாட்டையும், அருவ அனுபவத்தையும் அடைந்து வந்தார்கள்.

கலியுகத்தில் மனிதன் ஆயுளிலிருந்து மனோசக்தி வரை குறைந்து இருப்பதால் ஆங்காங்கு கோயில்களை நிர்மாணித்து அதற்கென தனி பூஜை முறைகளையும் ஏற்படுத்தினார்கள். அப்படி ஏற்படுத்தப்பட்ட பொழுது இறைவனால் படைக்கப்பட்ட எல்லாக் கலைகளையும் இறைவனுக்கே அர்ப்பணிக்க வேண்டும் என்ற பெரும் நோக்குடன், வாத்யம் முதல் சிற்பக்கலை வரை எல்லாம் கடவுளுக்கே அர்ப்பணிக்கப்பட்டு வந்தன. அந்த வாத்யங்களிலும் சிற்பக்கலைகளிலும் கூட நாம் வாழ்க்கையில் அனுபவிக்கக் கூடிய சாமான்ய விஷயங்களைக் காட்டாமல் அதிலேயும் இறை உணர்வு வரும்படியே அமைத தார்கள்.

இப்படி இருந்தும் ஏன் நமது மக்கள் கோயிலுக்குச் செல்லும் பழக்க முறைகளையோ, அங்கு வழிபடும் முறைகளையோ அறிந்து நடந்து கொள்ளவில்லை?

நமது மதத்தில் உள்ள ஜனங்கள் நல்ல மனோபாவம் உள்ளவர்களாகவும் புத்தி சக்தி உள்ளவர்களாகவும், இருந்து வந்தவரையில் விக்ரஹ வழிபாட்டு முறைகளை மானசிகமாகவே செய்து வந்தார்கள். மேலும், தங்கள் தங்கள் வீடுகளிலும் ஈஸ்வரனை ஆராதித்து வந்தார்கள். தற்காலத்தில் உத்தியோக நிமித்தமாய் அநேக நகர கிராமங்களுக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு இருப்பதாலும் ஆங்காங்கே அதற்குத் தகுந்த வசதி இல்லாததாலும் வீட்டிலும் வழிபடுவதற்கு வசதி இல்லாமல் போய் விட்டது. இப்போதுள்ள இயந்திர உலகில் பழக வேண்டிய நிர்ப்பந்தத்தினால் அன்றாட தேவைகளில் புத்தி, சக்தி அதிகம் செல்லுவதாலும் ஜனங்களுக்கு கடவுள் தியானத்திற்கு வேண்டிய மனோபலமும், புத்தி சக்தியும் குறைந்து விட்டது. ஆகவே கடவுளை எந்த முறையிலாவது வழிபட வேண்டும் என்ற எண்ணத்தினால் கோயிலுக்குச் சென்று வழிபடும் பழக்கம் ஏற்பட்டது. ஆகையால் கோயிலுக்குச் சென்று வழிபடும் பழக்கம் வெகு காலமாக வராததினால் கோயிலுக்குச் செல்லும் பழக்க முறைகளையோ, அங்கு வழிபடும் முறைகளையோ, அறிந்து நடந்து கொள்ள முடியாதவர்களாக இருக்கிறோம்.

நமது மதத்தின் முக்கியமான அடையாளங்கள் என்ன?

நெற்றிக்கு இடுதல், காது குத்திக் கொள்ளுதல், கச்சத்துடனிருத்தல், குடுமியுடன் இருத்தல் ஆகியவையே நமது மதத்தின் முக்கிய அடையாளங்கள்.

நமது மதத்தின் பிரகாரம் முக்கியமாய் கடைப்பிடிக்க வேண்டிய விதிகள் என்ன?

இறைவனை அருவ வடிவிலாவது, உருவ வடிவிலாவது வழிபடுதல். இறந்தவர்களுக்குத் திதி (தர்ப்பணம், ஸ்ரார்த்தம்) முதலியவைகள் கொடுத்தல், மறு பிறப்பில் நம்பிக்கை வைத்து கெட்ட காரியங்கள் செய்வதைத் தவிர்த்தல்.

# ஜகன் மாதா



ஸ்ரீ தேவிதாஸன் மதுராந்தகம்

''மாத்ரு தேவோ பவ!'' — உபநிஷத் இநதப் பொன் மொழியை உலகுக்கு எடுத்துரைக்கிறது. 'மாதாவை தெய்வமாக வணங்கு' — என்று நமக்கு உணர்த்தப்படும். இந்த அறிவுரை, நம்மை ஈன்றெடுத்த தாயை வணங்கு என்பது மட்டும் பொருளல்ல; இந்த ஜகத்தையும் ஜீவனையும் படைத்த — 'தாயை' வணங்கு என்பதே பொருளாகும்.

பிரம்மாண்டமான இந்த ஜகத்தைப் படைத்து, அதில் நம் ஜன்மத்தை ஓர் ஜீவனுன குழந்தையாக்கி, பாலனம் செத்து, அங்கம் வளர்த்து, அறிவுப் பாலூட்டி, ஆற்றல் அமுதூட்டி, வளர்த்து ஆளாக்கி அணைத்துக் காக்கும் அகிலாண்டேஸ்வரி அல்லவா - அந்தத் தாய்!

உலகத்து நாயகியாம் அந்த தெய்வீகத் தாயை, நாம் உள்ளன்போடு வழிபட்டு வணங்கினுல், நம் துயர் துடைத்து, அருள் அளித்து, ஆட்கொள்ளுகிருள் அன்னே! தூய்மையான தாய்ப் பாசம் கொண்ட அந்த தாய் 'பராசக்தி' எப்படிப்பட்ட எழிற் கோலத்துடன் திகழ்கிருள்...? ஸ்ரீ தேவியின் தேஜோ மயமான ரூபத்தை ஆத்மார்த்தமாக நாம் தியானித்து வணங்கினுல், நம்முடைய மனக்கண்ணுடியில், அந்த மோஹனத் திருஉருவைக் காணலாம்.

உலகத்திற்கும், நம் உள்ளத்திற்கும், குளிர்ச்சியான தண்மை அளிப்பதற் கென்றே, அவள் சந்த்ர மண்டலத்தில் நித்ய வாஸம் செய்கிருள் போலும்! சூர்ய, சந்த்ர, ஜ்வாலா மயமான திரு நேத்திரங்களால், கருணை ததும்பும் பார்வையுடன், படைத்தல், காத்தல் அழித்தல், ஆகிய முத்தொழில் புரிகிருள்.

தாய்மைத் தன்மையுடன் கூடிய அவள் முத்தொழிலோடு நின்றுவிடாமல். — தன் படைப்புக் குழந்தைகளல்லவா பக்தர்கள் — என்கிற பாச மனோபாவத்துடன், மனித்த மனதில் ஞான ஒளியை ஏற்றி, அஞ்ஞான இருளை 'மறைத்தல்' எனும் தொழிலும் அவளுடையதே ஆகும். ஞானம் தோன்றி, பரிசுத்தமான மனதுடன், தன்னை நாடி தஞ்சமென தன் சரண கமலத்தை வணங்கி வழிபடும் அடியார்களுக்கு தன்னுடைய கடாக்ஷத்தை 'அருளல்' என்பதும் அவருடைய நற்தொழிலாகும். இந்த வகையில் பஞ்ச கிருத்யங்களை செய்வது லோக மாதாவின் ஐந்து கருணைத் தொழில்களாகும்.

சகலதேவதா சக்திகள் புடைசூழ, சிந்தாமணி மண்டபத்தில், நான்கு வகையான சக்திகளும், அவளுடைய மங்கள ஸிம்மாஸனத்தை நான்கு கால்களாக தாங்கி நிற்க, அந்த மஞ்சத்தின் நடுவே "ஸ்ரீ சக்ர" பீடத்தில் அமர்ந்து, அன்னை அபிராமி நல்லாட்சி புரிந்து, அருளாட்சி வழங்கும் நளினம் தான் எத்துணை கோல அழகு!

நாகேஸ்வரியாம் ஜகன் நாயகியவள், தன்னை நாடி வணங்கும் நானில மக்களை, தன்னுடைய நாற்கரங்களால், நாட்டமுடன் ஆட்கொள்ளும் கருணையானது, அவளுடைய தாய்ப்பாசம் அல்லவா...?

நம்முடைய பந்த - பாசங்களை அகற்றிட, தன் வலக்கரத்தில் - பாசத்தை ஏந்தி நிற்கிருள். பாசம் களைந்தால் மட்டும் போதுமா......? மதம் கொண்ட, மத்தகஜம் போன்று, கட்டுக் கடங்காது நிற்கும். மனத்துவேஷத்தை அடக்க வேண்டாமா...? அந்த மதம் கொண்ட மன உன்மத்தத்தை அடக்கவே, மறு கரத்தில், அங்குசத்தைக் கொண்டிருக்கிருள்!

அவளால் படைக்கப்பட்ட ஜன்மம் - இது. இந்த ஜன்மத்திற்கு அவள் மாதா. தன் குழந்தைகளை பேணிக்காப்பது தாயின் தலை சிறந்த கடமையல்லவா...? காமக் குரோதாதிகளால் ஜீவன் கஷ்டப்படுவதைக் கண்டு அந்தத் தாய் உள்ளம் சகிக்குமா...? ஜீவனின் ஐம்புலன்களையும், அடக்கி ஆட்கொள்ளவே, கரும்பு வில்லும், மலர்க்கணையும், மற்றிரு கரங்களிலும் கொண்டிருக்கிருள்- கருணைக்கடலாம் கற்பகவல்லி!

கொடிய வில்லும், அம்பும், பகைவரை அழித்துக்கொல்ல,

வீரர்கள் கைக்கொள்ளும் ஆயுதங்கள்; — ஆனுல் பக்தரை அணைத்துக்கொள்ள, அன்னை கைக்கொண்டுள்ளதோ... செங்கரும்பு வில்லும், செழுமலர்ச் சரங்களும்!! புலன்களை கூரம்பு கொண்டு குத்திக் கிளருமல், தொட்டுக் களைவதற்கே, ஐந்து மலர்களாலான,புஷ்பபாணத்தை கரம்பற்றி நிற்கிருள் — கருணு கடாக்ஷி!

தாமஸகுணத்தை அடக்க
ஓர் தாமரை!

சினத்தை அடக்கி சித்தத்தை தெளிவுபடுத்த ஓர் சிவந்த அல்லி!

இச்சையெல்லாம் அவள் சேவைக்கே என ஆக்கிகொள்ள-
ஓர் இந்தீவரம்!

கள்ளங்கபட மகற்றி, மனத் தூய்மை பெற ஓர் கல்ஹாரம்!
மாயைத்திரை விலக்கி, மோன நிலே பெறச்செய்ய ஓர் மாம்பூ!

இந்த ஐந்து மலர்களாலான பாணத்தை, தன் அடியார்களாகிய குழந்தைகளே, ஆட்கொண்டு ரக்ஷிக்கவே, பிரயோகம் செய்கிருள் அன்னே! தன் குழந்தைகளின் மனதில் தோன்றும், வேசத்தையும் — நாசத்தையும் அழிக்க தாய்ப் பாசத்துடன், மலர்ப்பாணம் பூண்ட மங்கள நாயகியின் காக்கும் சக்திதான் எவ்வளவு மகத்தானது!

நாற் கரங்களினுல் அவள் நம்மை அணைத்துக் காத்தும்கூட, அவளுடைய அபய - வரத - ஹஸ்தங்கள் தென்படவில்லையே என்று ஏங்குகிறதா - மனம்...? ராஜ்ய தாயினியாக விளங்கும் ஸ்ரீ ராஜ ராஜேச்வரியின் பொற்பாத கமலங்கள் இரண்டும் நமக்கு அன்னையின் — அபய பாதங்களாகும்.

தாய்மையின் தூய்மை சாலச் சிறந்தது. அதனுலேயே நம் நாட்டிற்கு 'மாத்ரு பூமி' — தாய்நாடு, என்று பெயரிட்டு அழைக்கிருேம். அவள் - எங்கும் நிறைந்துள்ள பரம்பொருள். பசு தன் பாலை தன் - கன்றுக்கு மட்டுமின்றி, உலகின் எல்லா ஜீவராசிகளுக்கும் பயன்பட வழங்குவதால் 'கோமாதா', எனும் தூய்மையான தாய்மைப் பெயர் பெறுகிறது. ஸ்ரீ தேவியின் தெய்வீக சாந்நித்யமும், உலகில் தன்னை வணங்கும் அடியவர்களாம், குழந்தைகள் அனைவருக்கும் ஞானப்பால் அளித்துக் காத்து ரக்ஷிக்கும் தாய்மையாகும்.

தாயாகிய ஸ்ரீ தேவியை நம்முடைய ஹ்ருதய கமலத்தில் பிரதிஷ்டை செய்து அவளுடைய சரண கமலத்தை வழிபட்டு வந்தால், அந்த லோகமாதாவே நமக்குத் தேவையான, அறிவு, ஆற்றல், வல்லமை, ஆனந்தம் ஆகிய அனைத்து உணர்வுமாகி நம்மை ஆட்கொண்டு அருளுவது உறுதி!

●

# பூவனூர் புகுவார் வினை போகுமே

ஸ்ரீ சு. இராசப்பா, ஆழ்வார்திருநகர்

"ஆவின் மேவிய ஐந்தமர்ந்
தாடுவான்
தூவெண் ணீறு துதைந்த
செம்மேனியான்
மேவ னூல்விரி வெண்ணியின்
தென்கரைப்
பூவனூர் புகுவார் வினை
போகுமே"

என்று திருநாவுக்கரசரால் பாடல் பெற்ற ஸ்தலமாகிய திருப்பூவனூர் சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடி வட்டத்தில் நீடாமங்கலத்திலிருந்து மன்னார்குடி செல்லும் பாதையில் இரண்டு கல் தொலைவில் உள்ளது. இத்தலத்திற்கு புஷ்பவனம் என்ற பெயரும் உண்டு.

ஊருக்கு எல்லையாக பாமணி ஆறு ஓடுகிறது. ஆற்றைக் கடந்து சென்றால் இருமருங்கிலும் வயல் சூழப்பட்ட சாலை நம்மைத் திருக்கோயிலுக்கு அழைத்துச் செல்கிறது. கோயிலுக்கு மேற்கேயும், வடக்கேயும் கிராமம் அமைந்திருக்கிறது.

இத்தலத்தின் மூர்த்தியின் பெயர் ஸ்ரீபுஷ்பவனேஸ்வரர் என்பதாகும். சதுரங்க ஆட்டத்தில் அரசன் மகளாகிய ஸ்ரீஇராஜராஜேஸ்வரியை வென்று திருமணம் செய்து கொண்டதால் இவருக்கு ஸ்ரீ சதுரங்க வல்லப நாதர் என்றக் காரணப் பெயரும் உண்டு. இவருக்கு ஸ்ரீ கற்பக வல்லி, ஸ்ரீ இராஜராஜேஸ்வரி என்ற பெயர்கள் கொண்ட தேவிகள் இருவர். திருமணத்தின் பொழுது ஸ்ரீ இராஜராஜேஸ்வரிக்குத் தோழியாக வந்தவள் ஸ்ரீ சாமுண்டீஸ்வரி. இந்த அம்மனுடைய சந்நிதி திருவிடை மருதூரில் மோகாம்பாள் சந்நிதி இருப்பது போல் வடக்கு பார்க்க இருக்கிறது.

ஸ்ரீ சாமுண்டீஸ்வரி சந்நிதியில் வாரந்தோறும் ஞாயிற்றுக் கிழமையில் எலிகடிக்கும் மற்ற சகல விதமான விஷக் கடிகளுக்கும் வேர் கட்டப்படுகிறது. ஞாயிற்றுக் கிழமைகளில் சகல மதத்தினரும் இங்கு வந்து வேர் கட்டிக் கொள்கிறார்கள். ஸ்ரீ சாமுண்டீஸ்வரியை தெரிசிப்பதுடன்,

"அனுச யப்பட் டதுவிது
வென்னாதே
கனிம னத்தொடு கண்களும்
நீர்மல்கிப்
புனிதனைப் பூவனூ ரனைப்
போற்றுவார்
மனித ரில்தலையான மனிதர்"
ஆகிறார்கள்.

●

# "யோகாசனங்கள்" ஏன் செய்யவேண்டும்

ஸ்ரீ T.S. கல்யாணசுந்தரம்

உடம்பார் அழியில்
உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்
ஞானம் சேரவுமாட்டார்
உடம்பை வளர்க்கும்
உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன்
உயிர் வளர்த்தேனே

உடம்பினை முன்னம்
இழுக் கென்றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே
உறுபொருள் கண்டேன்
உடம்புள்ளே உத்தமன்
கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந்து
ஓம்புகின்றேனே

எண்ணறிய பிறவிதனில்
மானுடப் பிறவிதா
னியாதினும் அரிதரிது காண்
இப்பிறவி தப்பினு லெப்பிறவி
வாய்க்குமோ
ஏது வருமோ அறிகிலேன்

என தெய்வ நல்லருள் படைத்த உத்தமர்கள் அருள்வாக்காகும்.

ஒரு பூச்சியாகப் பிறக்காமல், புழுவாகப் பிறக்காமல் மனிதனுகப் பிறந்ததே பெரிய நற்பயன். மனிதப் பிறவின் முக்கியத் துவத்தை தெரிந்து உயர்ந்த சீரிய நல்வாழ்வு வாழாமல் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று உண்பதும், உறங்குவதும் உருண்டு புரளுவதுமாக வாழ்க்கையை கழித்து வந்தால் மக்களுக்கும் மாக்களுக்கும் என்ன வேறுபாடு உண்டு.

மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவரும் சுகமாக, இன்பமாக வாழத் தான் விழைகிறுன். ஆனுல் அப்படி சுகமாக, இன்பமாக வாழ்கிறுனு, வாழமுடிகிறதா என்று பார்த்தால் சாதகமான பதில் கிடைப்பது என்பது முடியாது. ஏன்?

உயிரோடு 100 ஆண்டு காலம் மனிதன் வாழவேண்டுமானுல் உடல் நோயில்லாமல், நலம் நிறைந்ததாக மன அமைதியுடன் வாழும் வாழ்க்கை விதிகளை அறிந்து அதன்படி வாழவேண்டும். முதற்கண் உடல் நோயில்லாமல் வாழ்க்கை வாழ எப்படி எப்படி எல்லாம் பயிற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டுமோ அப்படிபட்ட பயிற்சி தெரிந்து கொண்டு வாழவேண்டும்.

ஆரோக்யமே அருந்தன மென்றும் நோயற்ற வாழ்வே

குறைவற்ற செல்வமென்றும், தர்மார்த்தகாம மோக்ஷம் ஆரோக்யம் மூல உத்தமம் என நம் முதாதையர்கள் கூறிப் போந்தார்கள். வடலூர் வள்ளலாரும் 'நோயற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும்' என்றார்கள். A sound mind in a sound body என்று ஆங்கிலப் பழமொழி கூறுகிறது.

மனிதன் பிறக்கும் பொழுதே நோயுடன் பிறந்தவன் அல்ல. பிறகே அவன் நோய்களால் பீடிக்கப்பட்டு இன்னலுருகிறான். மனிதன் நலமுடன் இருக்கும் போது தன் உடம்பில் நோய் அணுகாது இருப்பதற்கான அப்பியாச முறைகளை சிறிதும் எண்ணிப் பார்ப்பது இல்லை. ஆனால் நோயினால் அவதியுறும் போது அந்த நோயை போக்கிக்கொள்ள அரும்பாடு படுகிறான்.

மனிதன் நோயில்லாமல் ஆரோக்யமாக இருப்பதற்கு தண்டால், பஸ்கி போன்ற உடற்பயிற்சிகளைச் செய்கிறான். மற்றும் பலர் கிரிக்கெட், ஹாக்கி, கால்பந்து, டென்னிஸ் போன்ற விளையாட்டு விளையாடுகிறார்கள். அப்படி பயிற்சி செய்பவர்களுக்கு உடலின் மேல் பாகம் உருண்டு திரண்டு இருக்கும். நாடி, நரம்பு, தசை பாகங்கள் உரம்பெற்றிரா. மேற்கண்டபயிற்சிகளால் நன்மை அந்த அளவுக்குத்தான் எதிர் பார்க்க முடியும். அவர்களுக்கு ஜுரம் போன்ற எளிய நோய் வந்தால் உருண்டு திரண்டிருக்கும் உடலின் கட்டுக்கோப்பு குன்றி விரைவில் பலஹீனம் அடைவார்கள். ஆழமான கடைக்காலின்றி கட்டும் கட்டிடங்களுக்கு ஒப்பாகும் அவர்கள் பெறும் பயிற்சிகளெல்லாம்.

பிரசித்தி பெற்ற இராமமூர்த்தி சாண்டோ நீரிழிவு வியாதியால் (Diabetes) 52வது வயதில் உயிர் நீத்தார். இந்தியா வரையில் படையெடுத்து வந்த மாவீரர் அலெக்சாண்டர் தாம் கிரேக்க நாட்டிற்குத் திரும்பிப் போகையில் மலேரியா ஜுரத்தில் 30வது வயதில் பாபிலோன் என்னுமிடத்தில் மாண்டார். பெரிய டெஸ்ட் கிரிக்கெட் விளையாட்டுக்காரர் கட்டுக் கோப்பான உடல் அமைப்பைபெற்றிருந்த ஷிண்டே என்பவர் நோய்வாய்ப்பட்டு 32 வது வயதில் இந்நில வுலகை விட்டகன்றார். மேற்கூறிய மூவரின் உடலமைப்பின் மேல் தோற்றம் உரமாயிருந்தும் அவர்கள் இரத்தத்திலுள்ள சிகப்பு அணுக்கள் மிகுதியாக இல்லாமையுமே அவர்கள் அகால மரணங்களுக்கு காரணமாகும்.

உடல் பலம் பொருந்தியதாயிருக்கவும், நாடி, நரம்பு, தசைகள் உரமாயிருக்கவும் உள்ளான்மா உணர்வுடனிருக்கவும் பண்டை முனிபுங்கவர்கள் "யோகாசனங்கள்" என்ற நிதிகுவியல்களை அளித்துப் போந்தார்கள்.

தத்துவ ஞானி தயாபரரான தாயுமான பெருந்தகையார் 'நியமலக்ஷணமும் இயமலக்ஷணமும் ஆசனதிவிதபேதமும்' என்ற பாடலில் யோகாசனங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து பேசுகிறார். ஆகவே உடல் உரமும், மன அடக்கமும் பெறுவதற்கு யோகாசனங்கள்தான் உகந்த உடற்பயிற்சி என்று தெரிகின்றது.

மனிதன் முதுகெலும்பு எவ்வளவுக் கெவ்வளவு வளையுந்தன்மையடைகிறதோ அவ்வளவுக்கவ்வளவு இளமையோடிருக்கமுடியும் 'சந்ததமும் இளமையோடிருக்க

லாம்'—தாயுமானவர். முதுமையும் இளமையும் முதுகெலும்பிலோ என்றார்கள் நம்பூர்வீகர்கள். யோகாசனங்கள் செய்தால் தான் முதுகெலும்பின் எல்லா பாகங்களும் வளையுந்தன்மை அடையும். மற்ற பயிற்சிகளால் வளையுந்தன்மை அடைய முடியாது.

யோகாசனங்கள் என்று பெயரைக் கேட்டவுடன் பொதுவாக எல்லோரும் நினைப்பது காட்டிலுள்ள யோகிகளும் முற்றும் துறந்த முனிவர்களுமே செய்யக் கூடிய ஒரு பயிற்சி என்று. யோகாசனங்களும் ஒரு சிறந்த உடற் பயிற்சியே. யோகாசனங்களில் இல்லறத்திலுள்ளவர்கள் எந்தெந்த ஆசனங்கள் செய்ய வேண்டும், துறவிகள் எந்தெந்த ஆசனங்கள் செய்யவேண்டும் என்று இருக்கின்றன. அதனால் இல்லறத்தில் உள்ளவர்கள் செய்வதற்கான ஆசனங்களை செய்யும் முறைகளையும் அதன் நன்மைகளை இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. மனிதஉடல் உள்உறுப்புகள் ஒரு பெரிய தொழிற்சாலை போன்று இறைவனால் அமைக்கப்பட்டுள்ளது உடலின் பல்வேறு உறுப்புகள் பலவகைகளில் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டு இயங்கிக் கொண்டேயிருக்கிறது. யோகாசனங்கள் உடம்பின் உள்ளே நடைபெற்று வரும் இயக்கங்களுக்கு புத்துயிர் அளிக்கக் கூடிய பயிற்சி. மற்றைய உடற் பயிற்சிகளினால் அந்த பலனை அடையமுடியாது.

(தொடரும்)



# ஆறுபடை வீடுகளும் நகரத்தார்களும்

1. திருப்பரங்குன்றம்

இங்குள்ள சிவாலயம் திருப் பணிச் செல்வர்களாகிய அமாரவதி புதூர் வயிநாகரம் நாகப்ப ஐயா, வேங்கடாசல ஐயா ஆகியோரால் 1893ல் திருப்பணி செய்து முடிக்கப்பெற்று குடமுழுக்கு நடத்தப் பெற்றது.

இத்தலத்தில் தைப்பூச நாளில் நகரத்தார், தெப்பத் திருவிழா நடத்துகிறார்கள்.

மதுரை நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் அன்னதான மடமும் விடுதியும் தெப்பக் குளமும் இங்கு நிறுவியுள்ளனர். சக்கந்தி சுப. க. சுப. குடும்பத்தார் சரவணப் பொய்கைத் திருக்குளமும், புதுவயல் அ. சு. பழ. குடும்பத்தார் பசுமடமும், நாகப்ப செட்டியார் நந்தவனமும் அமைத்திருக்கிறார்கள்.

2. திருச்செந்தூர்

செட்டி கப்பலுக்குச் செந்திலாண்டவன் துணை. செந்திலாண்டவன் கோவில் கொண்டுள்ள இத்தலத்தில் நகரத்தார்கள் மாசி மாதத்தில் மகேசுவரப் பூசை நடத்தி வருகின்றனர். நகரத்தார்களுக்கு இங்கு ஒரு விடுதி இருக்கிறது.

பூலாங்குறிச்சி ராம. ப. வ. பொதுக் குடும்பத்தார் வேத சாத்திர பாடசாலையும், கண்டமாணிக்கம் மெ. சி. பெரி. சோம. குடும்பத்தார் நந்தவனமும் அமைத்துள்ளனர்.

3. பழனி (திருவாவினன்குடி)

பழனி தலத்துக்கும் நகரத்தார்க்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இங்கு நள்ளிரவில் நடைபெறும் அர்த்தசாம அபிஷேகம் நகரத்தார் செலவில் நிகழ்கிறது. அப்போது பழனியாண்டவர் மலை மீது வலம் வரும் நேரத்தில் தீவட்டி பிடிக்கும் உரிமை நகரத்தார்களுக்கே இருந்து வருகிறது. இதற்கென மண்டபமும் கட்டளைகளும் ஏற்பட்டுள்ளன.

மலைமீதுள்ள தண்ணீர்ப் பந்தர் தேவகோட்டை ராம. மெ. சித. வயி. ராம. குடும்பத்தாரால் நடத்தப்பெறுகிறது. இதற்கு ஏற்படும் செலவுகளுக்காக அவர்கள் நிலம் வாங்கி மூலதனம் வைத்திருக்கிறார்கள். மலைப்படியில்

தீபங்கள் தேவகோட்டை தி. ராம. தி. குடும்பத்தாரால் போடப் பெற்றுள்ளன.

அடிவாரத்தில் நகரத்தார்க்குரிய இராக்கால மடம் இருக்கிறது. இங்கிருந்துதான் பூசைக்கு வேண்டும் பொருள்கள் யாவும் மலைக் கோவிலுக்கு அனுப்பப் பெறுகின்றன. இக்கட்டிடத்தைப் பத்து ஆண்டுகளுக்கு முன் கொப்பனபட்டி மு. ப.மு. குடும்பத்தார் கவினுறு முறையில் புதுப்பித்திருக்கிறார்கள்.

அன்னதான மடம், கண்டனூர் குட்டையன் செட்டியார் முயற்சியால் நகரத்தார்களால் ஏற்படுத்தப்பட்டு நகரத்தார்க்குப் பெருமைதரும் முறையில் நடந்து வருகிறது. தைப்பூச நாளில் இங்கு பெரிய அளவில் உணவு படைக்கப் பெறுகிறது. மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் உள்ள நகரத்தார்களின் பேருதவியால் இந்த மடம் சிரிய முறையில் பழுது பார்த்துப் புதுப்பிக்கப் பெற்றிருக்கிறது.

இந்த அன்னதானமடம், நகரத்தார்களால் முன்னூறு ஆண்டுகளுக்குமுன் அன்னதானம் செய்தல், காவடி செலுத்துதல் முதலியவற்றுக்காக அமைந்தது. பல ஊர்களிலிருந்தும் நகரத்தார்கள் சர்க்கரைக் காவடிகளுடன் புறப்பட்டு ஐந்து நாட்கள் கால்நடையாக பக்தியுடன் பயணம் செய்து அன்னதான மடத்துக்கு வந்து சேருவது வழக்கம். இதிலுள்ள அன்னதான மண்டபத்தில் ஸ்ரீ ஞான தண்டாயுதபாணிக்கும் விநாயகப் பெருமானுக்கும் கோவில் உள்ளது. இக்கோவிலின் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 5 - 12 - 1971 ல் இனிது நிறைவேறிற்று.

நகரத்தார்க்குரிய நந்தவனம் ஒன்றும் பழனியில் உண்டு. காரைக்குடி முரு. சா. குடும்பத்தார் அந்தணர் உணவு நிலையம் நிறுவியுள்ளனர். தேவகோட்டை திருமுருகாற்றுப்படை இலக்குமணச் செட்டியார் முயற்சியால் பசுமடமும் கண்டமாணிக்கம் சாத்தப்ப செட்டியார், சொக்கநாதபுரம் மெ. சு. உ. சுப்பிரமணியஞ் செட்டியார் இவர்களால் திருப்புகழ்ப் பாடசாலையும் அமைக்கப் பெற்றிருக்கின்றன.

திருவாவினன்குடி சிவாலயம் காரைக்குடி நா. மு. சுப. குடும்பத்தாராலும் கண்டனூர் கு. ப. சு. பழ. குடும்பத்தாராலும் 1910ல் திருப்பணி செய்யப் பெற்றது. 1970ல் அவர்கள் முயற்சியால் மீண்டும் குடமுழுக்குச் செய்யப் பெற்றது.

### 4. சுவாமி மலை (திருவேரகம்)

திருவேரகம் என வழங்கும் இப்படைவீட்டில் மலை அடிவாரத்திலுள்ள கோவில் நகரத்தார்களால் திருப்பணி செய்யப் பெற்றது. அமெரிக்காவில் இப்போது விநாயகர் கோவில் கட்டும் முயற்

சியில் ஈடுபட்டுள்ள கானாடுகாத்தான் டாக்டர் அழகப்பன் அவர்களின் முன்னோர்களாகிய வெ. அரு. அருணாசலம் செட்டியார், அவர் மகன் வெள்ளையப்ப செட்டியார் ஆகியோரே இத் திருப்பணியைச் செய்து 1907-லும் 1927-லும் குடமுழுக்கு விழா நடத்தியவர்கள்.

கானாடுகாத்தான் வெ. அரு., வெ. வீர. குடும்பத்தார்கள் இங்கு ஒரு மடம் நடத்தி வருகிறார்கள்.

5. குன்றுதோர் ஆடல் (திருத் தணிகை)

சென்னை நகரத்தார்கள் நூற்றைம்பது ஆண்டுகளாக, தணிகைக் குமரனிடத்தில் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள்.

சென்னை — பவளக்காரத் தெரு 34 ஆம் எண்ணிலுள்ள தேவகோட்டையார் கோவில் வீட்டுப் பழைய தண்டாயுதபாணி கோவில், 27 ஆம் எண்ணிலுள்ள காரைக்குடியார் கோவில் வீட்டுப் புதுத் தண்டாயுதபாணி கோவில் ஆகிய இரண்டு கோவிலாரும் சேர்ந்து, திருத்தணிகையில் அறக் கட்டளைகளை நிறுவியுள்ளனர். இவர்களின் பிரதிநிதிகளாக முறையே தேவகோட்டை அழ. சுப. பழ. குடும்பத்தாரும் கானாடுகாத்தான் மு. சித. மு. குடும்பத்தாரும் இந்த அறங்களை மேற்பார்த்து வருகின்றனர்.

மலை அடிவாரத்தில் மலைப்படி அருகே நகரவிடுதியும் அதற்குக் கீழ் புறம் அன்னச் சத்திரமும் உள்ளன. இரண்டிலும் கோவில் கொண்டுள்ள விநாயகர் உருவங்களுக்கு நாள்தோறும் பூசை நடைபெறுகிறது.

மலை மீதுள்ள குமரனுக்கு அபிடேகத்திற்குப் பாலும் நெய்வேத்தியத்திற்கு அரிசியும் நாள்தோறும் நகர விடுதியிலிருந்து அனுப்பப் பெறுகின்றன. ஆடிக் கார்த்திகையன்று நகரத்தார்களுக்கும் துறவிகளுக்கும் ஏழைகளுக்கும் உணவு படைக்கப் பெறுகிறது.

அன்று, தணிகை மலையிலிருந்து இறங்கி, குமரன் நகர விடுதிக்கு வரும்போது அப்பெருமானுக்கு, நகரத்தார் பட்டுச் சாத்தி அருச்சனை செய்கின்றனர்.

6. அழகர் கோவில்

பழமுதிர்சோலை என்னும் முருகன் கோவிலே பெருமாள் கோவிலாக இப்போது விளங்குகிறது. அழகர் கோவில் திருப்பணியாளர்கள் அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தாரே ஆவர்.

# அரசமரம் வலம் வருதல்

ஸ்ரீ அ. முத்தையன் கண்டாச்சிபுரம்

அரசமரம், மக்களால் தெய்வ வடிவமாகப் பாவித்து வணங்கி இஷ்ட சித்திகளை யடையப் பெறுவதாகிய தெய்வத் தன்மை வாய்ந்தது.

பிணி நீங்குதற்கும், மக்கட் பேறு வேண்டியும் மற்றும் சில பல காரியங்கள் சித்தியடையவும் அரசு சுற்றி வேண்டிய வாறு அடைகின்றனர். இம்முறை முன்னோர்களால் பண்டைக் காலத் திருந்தே கையாண்டு வரப்பட்டுள்ளது.

அமாவாசையிலும், சோமவா ரத்தோடு கூடிய அமாவாசையிலும், மற்றும் சுபகாலங்களிலும் வலம் வருவர். அச்சமயம் தங்கள் தங்களால் இயன்ற தானங்களும் வழங்குவர்.

அரச மரத்திற்குப் "போதி" என்னும் ஒரு பெயரும் உண்டு. போதம்=ஞானம். போதத்தை யுடையது போதி. கௌதம புத்தர், நைரஞ்சரை யென்னும் நதிக் கரையிலேயுள்ள "பணையைந் தோங்கிய பாசிலைப் போதி"யின் கீழிருந்து இருபத்தெட்டுத் தினங்களில் காம வெகுளி மயக்கம் அற்று மாரனையும் வெல்லும் ஞானத்தை அடைந்ததாக பௌத்த நூல்கள் கூறுகின்றன

"போதி நிழலிற் பொருந்திய புத்தர் விரைவில் ஞானம் பெற்றமையின் தம்பால் அடைந்தாரது அஞ்ஞானத்தைப்போக்கி மெய் ஞானத்தைக் கொடுக்குந்திறன் இம்மரத்திற்கு உண்டென்பது புலனாகிறது.

விஷ்ணுவின் வலக்கண்ணிலிருந்து அரசமரம் தோற்றியதெனவும், எல்லா மரங்களுக்கும் முதன்மையாக இருக்கும்படி அபிஷேகித்து "அரசு" எனப் பெயரிட்டனர் என்றுஞ் சொல்லப்படுகிறது. கீதையில் பகவான், "அச்வத்த: ஸர்வவ்ருக்ஷாணாம்" என "மரங்களுள் அரசமரம் நான்" என்கிறார். பிரமச்சரியங்காத்து ஒழுக்கத்திற் சிறந்து விளங்கிய ஒருவன் வினைப்பயனால் இறப்பின் அரச மரமாகப் பிறப்பான் என்றும், இடது பக்கத்தில் வேப்ப மரம் வைத்து நாகப் பிரதிட்டை செய்து வைதிக முறைப்படி விவாகம் செய்து வைப்பவர்களுக்குப் புத்திர பாக்கியம் உண்டாகுமென்றும் ஆன்றோர் கூறுவர்.

இம்மரத்தில் தாம்பிரசத்தும், மின்சாரமும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. திருப்புல்லாணி என்னுந் திவ்வியதலத்திலே விஷ்ணு மூர்த்தியானவர் திருவரசாய் நின்று அருள் செய்கின்றார் என்பது கீழ்வரும் பழம் பாடலால் விளங்குகிறது.

"பெருவயிறு கண்டமாலை
உதரவலி யண்டவாயு
பிரமிய கிரந்திசூலை
தலை நோவும்
இருமலொடு தந்தவாயு குருடு
செவிடுஞ் சொலூமை
இவைகள் முதல்
தொந்தரோக வினையாவும்
ஒரு நொடியில் அஞ்சியோடும்
வறுமையொடு சஞ்சிதாதி
யுபரியினடைந்த பாவம்
அவைதாமும்
மருமலர் பிறந்த கோதை
மருவிமகிழும்புலாணி
வளரரசு கண்டபேரை
யணுகாவே"

இனி, உத்தம தேவர் தம்முள் உத்தமனாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் தரிசித்து உய்யக் கொண்டருளிய திருமேனிகள் பலவற்றுள்ளும் சிறந்தது சிவலிங்கத் திருமேனியே. இத்திருமேனியில் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மும்மூர்த்திகளும் அடங்குவர். இதனை

"பிரமன்கீழ் மாயன்நடுப்
பிஞ்ஞகன்மேலீசன்
பரமுள்ள லிங்கத்தின்
பாங்காம்"
(கண்ணுடையவள்ளலார்)

என்பதாலறிக.

அரசமரமும் அடிப்பாகம் பிரம்மரூபமாகவும், மத்திய பாகம் விஷ்ணு ரூபமாகவும், மேற்பாகம் சிவரூபமாகவும் விளங்குகின்றது.

எனவே அரச மரம் சிவலிங்கத் திருவுருவமாம் என்பது புலன்.

அரசமரம், அதன் இலை, காய், பூ முதலியவற்றை எடுத்து மக்கள் உபயோகப்படுத்துவதில்லை. இதைக் காணுந்தோறும் கடவுள் சிந்தனையே தோன்றுகிறது.

இதுகாறும் கூறியவற்றால், அரச மரம் தெய்வ வடிவ மென்றும், ஞான சாதனங்களோடு இணைக்கப்பட்டுள்ளதென்றும், வலம் வந்து வணங்குவோர் காரிய சித்தி யடைவர் என்றும் அறியக்கிடக்கின்றது.



# நான் கண்ட ஸ்கந்தகிரி

குமாரி விசாலாக்ஷி மதுரை

மனித வாழ்வில் அறம், பொருள், இன்பம் எல்லாம் சுலபமாகப் பெற்றுவிடலாம். அமைதி என்பது எளிதில் பெறமுடியாது. நடைபாதையில் வசிக்கக்கூடிய ஒரு ஏழையைக் கேட்டால் மனதிற்கு அமைதியே இல்லை என்பான். பண மேடையில் படுத்துப் புரளும் ஒருவனைக் கேட்டால் அவனும் மனதிற்கு அமைதியே இல்லை என்பான். அதுதான் இறைவனுடைய திருவிளையாடல்.

அமைதி என்பது விலை கொடுத்து வாங்கும் பொருளல்ல. மனம், வாக்கு, காயம் இம் மூன்றும் சுத்தமாக இருந்தால் மட்டும் அமைதி ஏற்பட்டுவிடாது. இறைவனை இடையருது நினைந்து நினைந்து, அவன் அருளைப்பெற பக்தி செய்ய வேண்டும். பக்தி செய்தால் முக்தி பெறலாம்.

ஒரு கோவிலுக்கோ, ஒரு ஸ்தலத்திற்கோ செல்லும் பொழுது அமைதியும், பக்தியும் தானுக வர வேண்டும். இவை இரண்டும் தானுக வரவேண்டும் என்ருல், அந்த ஸ்தலத்தின் மகிமைதான் காரணம். அந்த ஸ்தலத்திற்குச் சென்ருல் ஒன்றுமே அறியாதவர்களுக்கும் மன அமைதி ஏற்படக் கூடிய இடமாக இருத்தல் வேண்டும்.

சேலத்திலிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள கந்தகிரி என்னுமிடத்தில் நாம் வேண்டும் அமைதியை அடையலாம். ஆஹா! என்ன அழகான இடம். சுற்றிலும் மலைகள்; அம்மலைகளின் நடுவே குமரன் கையில் தண்டாயுதம் தாங்கி தண்டாயுத பாணியாகக் காட்சி கொடுக்கிருன்.

எல்லா முருகன் ஸ்தலங்களிலும் மலை மீது முருகன் கோயில் இருக்கும். மலை மீது ஏறிச் சென்ருல் அங்கிருந்து மறுபடியும் கீழே உள்ள பூமி தான் தெரியும். ஏற முடியாது. மலை மீது ஏறி முருகனை தரிசிக்கச் சென்ருலும் கூட, நாம் செய்த பாபங்கள் எல்லாம் விட்டு விட்டு வந்த பூமியைத் தான் மறுபடியும் பார்கிருேம். நாம் செய்த பாபம் நம்மை விடுவதில்லை. சொர்க்கத்திற்குச் சென்ருல் கூட நரகத்தைப் பார்க்க ஆசைப்படுகிருேம். ஆனுல் கந்தகிரியில் அப்படியில்லை. மலைமீது ஏறிச்சென்று விட்டால் மறுபடியும் பூமியைப் பார்க்க முடிவ

தில்லை. அதற்கு, அர்த்தம் என்னவென்றால், என்னைக் காண்பதற்கு மேலே வந்து விட்டாய், திரும்பத் திரும்ப பூமியைப் பார்க்காதே, திரும்பி மறு பிறவி எடுக்க விரும்பாதே என்ற விருத்தாந்தத்தை உபதேசிக்கிறான்.

கந்தகிரியில் அமர்ந்துள்ள ஸ்ரீ கந்தகுரு கோவிலைச் சுற்றிலும் மலையும், மேகங்களும்தான் தென்படுகின்றது. கோவிலுக்கும் மேலே செல்ல வேண்டுமானால் சொர்க்கம்தான் செல்ல வேண்டும். அமைதி! அமைதி!! அமைதி!!! எங்கும் அமைதி. கந்தகிரிக்குச் சென்று விட்டால் அமைதியைத் தவிர வேறு எதையும் காண முடியாது. நான் உனக்குக் கோடி ரூபாய் தருகிறேன் எங்கிருந்தாவது அமைதி என்பதை வாங்கி வா என்று மனது அலைமோதும் மக்கள் கந்தகிரிக்கு வந்தால் அமைதியைப் பெறலாம்.

கந்தகிரியில் அமர்ந்துள்ள குமரனுக்கு நேர் எதிராக பதினெட்டுக் கைகளைத் தாங்கி அருள் சுரந்து கொண்டிருக்கிறாள் அம்பிகை. அஷ்டா தசபுஜ மகாலெக்ஷிமி 18 கைகளையும் கொண்டு, வரும் பக்தர்களுக்கு, அருளையும், பொருளையும், வாரி வாரி வழங்குகிறாள். அன்னை மகாலெக்ஷிமி நான்கு கைகள் இருந்தால் போதாது என்பதால் பதினெட்டுக் கைகளை கொண்டிருக்கிறாள்.

அம்பிகையின், கம்பீரமான, உருக்கமான தோற்றம், வரும் பக்தர்களை மெய் சிலிர்க்க வைக்கிறது. அம்பிகை எப்படித்தான் தனக்கென்று இம்மாதிரி உருவத்தை ஆக்கிக் கொண்டாளோ தெரியவில்லை. இந்த அம்பிகை அஷ்டா தசபுஜ மஹா லெக்ஷிமியை பிரதிஷ்டை பண்ணுவதற்கு, எப்படித்தான் மலை மீது பக்தர்கள் ஏற்றிக்கொண்டு வந்தார்களோ. நினைக்கவே மெய் சிலிர்க்கிறது. அம்பிகையும், குமரனும் ஒருவரை ஒருவர் நோக்கிக் கொண்டும், பேசிக் கொண்டும், தம்மைக் காண வரும் பக்தர்களுக்கு அடைக்கலம் கொடுக்கிறார்கள். எந்த ஸ்தலத்திலும் இம்மாதிரி சன்னதிகளைக் காண முடியாது.

ஆனால் இவ்வளவு புண்யங்களை நாம் அடைவதற்குக் காரணமாக இருப்பவர், புதுக்கோட்டை ஸ்ரீ சாந்தானந்தா சுவாமி அவர்கள் தான். புதுக்கோட்டையில் ஸ்ரீ புவனேஸ்வரியை பிரதிஷ்டை செய்து, நம்மைப் போன்றவர்களுக்கு பக்தி நெறியைக் காட்டினார்.

கந்தகிரியில் கந்தனையும், அம்பிகையையும் பிரதிஷ்டை செய்து, முத்தியடைய வழியைக் காட்டியிருக்கிறார். எப்படித்தான் கந்தகிரியை அமைதிக்கென தேர்ந்தெடுத்தாரோ தெரியவில்லை. ஒரு தாய் மகனைப் பெற்றெடுத்து, வளர்த்து ஆளாக்கும் வரையில், தாயினுடைய பொறுப்புணர்ச்சி அதிகமாகிறது. மகன் நன்றாக வளர்ந்து, நன்றாகப்படித்து, நல்ல பதவியடைந்ததும், வளர்த்தெடுத்தத் தாய் மகனுடைய பாது

காப்பில் ஆகிவிடுகிறாள். அது போல் கந்தகிரியில் அமர்ந்திருக்கும், அம்பிகை கையில் தண்டாயுதம் தாங்கிய குமரனின் பாது காப்பில், ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு இருப்பதால், குமரனுக்கே முக்கியத்துவம் கொடுத்திருப்பதால் மலைக்கும் கந்தகிரி எனப் பெயரிடப்பட்டிருக்கிறது. தந்தைக்கு உபதேசம் செய்தமையால், முருகப் பெருமானுக்கும் கந்தகுரு என திருநாமம் சூட்டப் பெற்றிருக்கிறது.

நம்மையெல்லாம் உய்விக்க, புதுக்கோட்டை ஸ்ரீ சாந்தானந்தா சுவாமிகள் அவர்களின் பூரண முயற்சியால் கந்தகிரியில் அமர்ந்துள்ள கந்தகுரு பெருமானும், அம்பிகை அஸ்டா தசபுஜ மஹா லெக்ஷிமியும், தம்மைக் காணவரும் பக்தர்களைக் காத்து அருள்புரிவார்களாக.



திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S. சித்தநாதன் சன்ஸ் S. குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொரித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# நல்லவைகளையே நினைக்க வேண்டும்



ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்

வாழ்க்கையில் வெற்றி பெற மகிழ்ச்சியுடன் இருக்க எப்போதும் நல்லவைகளையே நினைக்க வேண்டும். கெட்டவைகளை நினைக்கக் கூடாது. அதைப் பற்றிச் சிந்திக்கக் கூடாது. கெட்டவைகளை நினைப்பதால் நம் மன அமைதி கெடுகிறது. எதிலும் கெட்ட எண்ணமே தோன்றும்.

எதிர்காலம் எப்படி இருக்குமோ என்று எண்ணிப் பயப்படுகிறவர்கள் எதிர்காலத்தைப் பற்றி நினைக்கவே வேண்டாம். இன்றையப் பொழுதை, இருபத்து நான்கு மணி நேரத்தை மகிழ்ச்சியுடன் கழிக்க நினைக்க வேண்டும். இப்போது நாம் செய்யும் வேலைகளை ஒழுங்காகச் செய்ய வேண்டும்.

சிலருக்கு மற்றவர்களுடன் இருக்கும்போது, மற்றவர்களுடன் பேசும்போது, மற்றவர்களுடன் வெளியே போகும் போது மட்டுமே மகிழ்ச்சியாய் இருக்கும். உற்சாகமாக இருக்கும் தனிமையில் இருக்கும்போது தம்மால் எதுவும் முடியாது என்று பயமாக இருக்கும். உற்சாகம் குறையும். கவலைகள் ஏற்படும். முதலில் இப்படிப்பட்ட அச்சத்தைப் போக்க வேண்டும். மனத்தில் எப்போதும் துணிவை வரவழைத்துக் கொள்ள வேண்டும்.

சிலர் மற்றவர்களை நம்புவதில்லை. மற்றவர்களை நம்பாத இவர்களை மட்டும் மற்றவர்கள் எப்படி நம்புவார்கள்? ஆகையால் மற்றவர்களை நம்ப வேண்டும் மற்றவர்களுக்கு முடிந்தவரையில் உதவி செய்ய வேண்டும். யாரையும் தரக்குறைவாக மதிக்க கூடாது. எவர் மனமும் புண்படும்படி பேசக் கூடாது. நடக்கக் கூடாது.

கெட்டவைகளை நினைக்கவே கூடாது. கெட்டவைகளை நினைப்பவர்களில் பலருக்குத் தாம் தூக்கம் வருவதில்லை. தூக்கம் இல்லாமல் தவிப்பவர்களுக்கு நடுநிலையாளர் அறிவுரை கூறுகிறார். நம்மைச் சேர்ந்த, நமக்குத் தெரிந்த யாராவது சிலருக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும். அல்லது அவர்கள் பாராட்டும்படி நாம் நடந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் இதைப் பற்றியே கற்பனைகள் செய்து கொண்டு தூங்க முயற்சி செய்

தால் பத்தே நாட்களில் தூக்க மின்மை என்னும் நோய் நீங்கி நல்ல தூக்கம் வரும். இது உறுதி. பேச்சில், செயலில் எண்ணத்தில் எல்லாம் நல்லவைகளையே நினைக்க் வேண்டும்.

மற்றவர்களை ஏமாற்றவோ மற்றவர்களை நம்பும்படி செய்யவோ நாம் மகிழ்ச்சியுடன் இருப்பதைப்போல் நடிக்கக் கூடாது. உண்மையிலேயே நம்மனத்துக்கு நாம் மகிழ்ச்சியுடன் இருக்கிறோம் என்று பளிச்சென்று தோன்ற வேண்டும். போலி மகிழ்ச்சியாலோ, வெறும் நடிப்பாலோ நாம் முன்னுக்கு வரமுடியாது.

எப்போதும் நல்லவைகளையே நினைத்து மற்றவர்களுக்கும் முடிந்த உதவி செய்பவர்கள் தான் விரைந்து வாழ்க்கையில் முன்னேறி வருகிறார்கள்.



# சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

ஸ்ரீ V. சின்னஸ்வாமி ஐயர்

சாந்தமான ஸ்வரூபம், ஹித மான வாக்கு, கண்ணியமான தோற்றம், அபரிமிதமானமான தேஜஸ், கம்பீரமான த்வனி, தனக்கெனத் தனிப்பட்ட முறை யில் ஸம்ஸ்கிருத ச்லோகங்களைச் சொல்லும்பாணி, தர்மத்தை ஆணித்தரமாக எடுத்துச் சொல் லும் தைரியம், பக்தியோடு அனு பவித்து உபன்யாஸிப்பதால் ஸகல ஜனங்களையும் வசீகரித்து பரவசப்படுத்தும் சக்தி இவை யெல்லாம் ஒருங்கே நிரம்பப் பெற்ற உபன்யாஸகர் என்றால் ஸ்ரீ தீக்ஷிதரைத்தான் சொல்ல வேண்டும்.

1936-ல் விழுப்புரம் ஹனுமார் கோவில் தெருவில அவருடைய உபன்யாசம் முதன் முதலாக கேட்கும் பாக்கியம் கிட்டியது. அதற்குப் பிறகு சுமார் 33 வரு ஷங்கள் அடிக்கடி அவர்கள் உபன் யாசம் கேட்டு வந்திருக்கிறேன். நெருங்கிப் பழகியுமிருக்கிறேன்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதி பதி ஜகத்குரு ஸ்வாமிகளின் பூர்ண ஆசியும், அனுக்ரஹமும் கொண்டு உபந்யாசம் செய்ய ஆரம்பித்த ப்ரும்மஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் உபன்யாசக உலகத் திலேயே உச்சவரம்பேறி, உச்சஸ் தானத்தில் நின்று ஆங்கிலம் படித்த பட்டதாரிகள், தலைமை உத்தியோகம் வகிப்பவர்களுக்கும் மேலான பதவியை உபன்யாசம் செய்யும் ஆற்றலினால் அடைதல் சாத்தியம் என்பதை உலகுக்கு பறைபறைவித்தார்.

ஆரம்பகாலங்களில், எவையர் போல் சிறிய வருமானமே கிட் டினதாயினும், ஊக்கமும், ஆற்ற லும், அனுபவமும் வளர வளர, ஸம்பாவனையாகவும் காணிக்கை யாகவும், ஆயிரக்கணக்கான ரூபாயை ஜனங்கள் அர்ப்பணித் தார்கள் என்ற விஷயம் இந்தியா முழுவதும் தெரிந்த விஷயம்.

ஆரம்ப காலங்களில் தன்னந் தனியே உபன்யஸித்த ஸ்ரீ தீக்ஷி தருக்கு 1953-ல் உபன்யாசக சக் கரவர்த்தி என்ற பட்டம் மாம் பலம் சிவ விஷ்ணு ஆலயத்தில் ஸ்ரீ ராம பட்டாபிஷேக தினத் தன்று ஸ்ரீ C. P. ராமஸ்வாமி ஐயர் தலைமையில் வழங்கிப் பாராட்டினதன் பிற்காலம்

ராஜாக்கள் எப்படி பரிவாரத்துடன் செல்வாரோ, அம்மாதிரியே உற்ருர், உறவினர், பண்டிதர்கள், சிஷ்யர்களுடன் (Camp) போகும் பழக்கம் பல வருஷங்களாக ஏற்பட்டது. இதனுலேயே முன்போல் சொல்ப செலவில் ஸ்ரீ தீக்ஷிதர் உபன்யாசம் ஏற்பாடு செய்ய தயங்கினுர்கள். அதனுல் ஸ்ரீ தீக்ஷிதருடைய ஸௌலப்யத்துக்கோ அவர் தாக்ஷிண்ய சுபாவத்திற்கோ சற்றும் குறைவு காணவில்லை. பழகினவர்களுடன் எப்போதும் அன்பும் ஆதரவும் காட்டி வந்தார்கள்.

சிவ விஷ்ணு ஆலயத்தில் நீண்ட நாட்கள் முதன்முதலாக பூர்ண மஹாபாரதம் செய்தபோதுதான், உபராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன், பீஷ்மர் போன்ற ராஜாஜி, இவர்களின் பரிச்சயம் ஏற்பட்டு, ஸ்ரீ தீக்ஷிதர் உபன்யாசத்தை ச்லாகித்துக் கொண்டாடும் சந்தர்ப்பங்கள் ஆரம்பமாயின என்ருல் உண்மையேயாகும்.

அச்சமயம்தான், மஹாபாரதப் பூர்த்தியில், ஒரே தினத்தில் ஸ்மார்த்த வைஷ்ணவ, மத்வ —

ஸஹஸ்ர போஜனமும், ஆயிரக்கணக்கான ப்ராம்மண போஜனமும், ஸமகாலத்தில் பிரத்தியேக ஏற்பாட்டால் பல்லாயிரக்கணக்கான ஏழைகளுக்கு அன்னதானமும் நடந்த வைபவத்தை, ஸ்ரீ தீக்ஷிதர் டில்லி, பம்பாய், கல்கத்தா பூனா முதலிய இடங்களிலும், மதராஸிலும் மற்ற இடங்களிலும், உபன்யாஸ மத்தியில் பெருமையுடன் சொல்லத் தவறினதில்லை. பெருமையும், கீர்த்தியும், செல்வாக்கும், தவமும் நிரம்பஸம்பாதிக்கும் அதிர்ஷ்டமும் பல திருப்பணிகளுக்கு வாக்ஸஹாயம் மூலம் பணம் திரட்டும் உதார குணமும், நமது காமகோடி ஆசார்யாள் விழுப்புரம் அவதாரஸ்தலம் கட்டிடத் திருப்பணிக்கு உபன்யாச மூலம் நிதி திரட்டின பெருமையும், ஸ்ரீ தீக்ஷிதரைச் சேர்ந்ததேயாகும்

ஆயுள் பூராவும் ஆசாரம், அனுஷ்டானம், வைதிக தர்மம் பிரசாரம் செய்து வந்த ஸ்ரீ தீக்ஷிதர் அந்திய காலத்தில் ஆபத்ஸந்யாசம் எடுத்துக்கொண்டது நமது காமகோடி ஆசார்யாளின் பூர்ண கருணையும், முத்தண்ணாவாள் ஆசியுமே காரணமென்பதில் ஐயமில்லை.

நிரம்ப ஸம்பாவனையும், மிகுந்த புகழையும், உபன்யாசகர்கள் அடைய முடியுமென்பதை எய்திக் காட்டிய ஸ்ரீ தீக்ஷிதர் உபன்யாசம் செய்யும் எல்லாப் பண்டிதர்களுக்கும் வித்வான்களுக்கும் ஒரு தனிப் பெருமையையும் ஸம்பாதித்து மாக்கதரிசியாகத் திகழ்ந்தார் என்பது பொதுஜன வாக்கு. ஆயிரக்கணக்கானவர்களுக்கு மந்திரோபதேசம் செய்து குருஸ்தானத்தையும் அடைந்த ஸ்ரீ தீக்ஷிதர் மஹா புண்யாத்மா - அவரை நினைக்கும்போதும் அஞ்சலி செய்யத்தான் தோன்றுகிறது. எத்தனை எத்தனையோ, ஸ்தோத்ர புத்தகங்கள் தமிழ் அர்த்தத்துடன் நாராயணீயம் ஸ்காந்தம் போன்ற கிரந்தங்கள், அச்சிட்டு வெளியிட்டிருக்கும் பேருபகாரத்தை எழுதியோ சொல்லியோ ஸாத்தியமில்லை.

ராமாயணமோ - பாகவதமோ அல்லது ஸ்காந்தமோ எதுவானாலும் சரி அதில் நாயக - நாயகியான மூர்த்திகளுக்கு வடிவு கொடுத்து வர்ணனைகள் மூலம் அழகுறச் செய்து ஆபரணங்களைப் பூட்டி, திவ்யதேஜஸ்ஸுடன் தயாமூர்த்தியாக நம் கண்முன் நிறுத்தி மனது கரையவும், கண்களில் பாஷ்பம் தாரை தாரையாகப் பெருகவும் செய்யும் அபார ஸாமர்த்தியம் ஸ்ரீ தீக்ஷிதரின் நிகரற்ற சக்தியே. பூஜாபலத்தின் தனிப் பெரும் கருணையே என்னலாம். இன்றைக்கும் அவருடைய சிஷ்யர்கள், அவர்கள் போட்ட புஸ்தகங்கள் பாராயணம் செய்பவர்கள் தினமும் அவரை நினைக்காமலில்லை.

ஸ்ரீ தீக்ஷிதர் நம்மிடம் வாழ்கின்றார்! அவர் உபன்யாஸ பாணி வாழ்கின்றது! ●

# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள்வாக்கு



மனம் அசைவதினால் ஸகல அனர்த்தங்களும் உண்டாகின்றன.

ஆசை ஆற்றவனுக்கு மனம் சலியாது.

ஆசை உள்ளவன் அரை நிமிடமும் அமைதியுடன் இருக்க முடியாது.

ஒவ்வொரு ஸங்கல்பமும் ஒவ்வொரு பிறவிக்கும் வித்தாகி விடுகிறது.

சட்டத்தை மீறுபவன் சுயநலம் உள்ளவன் என்பதை மறவாதே.

கடுகளவு காமமிருந்தாலும் கடவுளை உன்னால் காணமுடியாது.

சிற்றின்ப வாழ்க்கை நரகத்திற்குச் செல்லும் வழியாகும்.

கடவுள் கொடுத்த பொறுப்பை வெறுப்பவன் கடவுளையே வெறுப்பவனாவான்.

கோபமுள்ளவன் பாவம் செய்தே தீருவான்.

பொறாமைப் படுபவனுக்கு வெற்றியே கிடையாது.

கர்வம் மனிதனை அழிக்கும் சத்ருவாகும்.

செருக்கானது பாவத்தைப் பெருக்கும்.

பிறர்மனம் நோகும்படி செய்பவன் அசுரனாவான்.

பிறரை வெறுப்பவனைத் தெய்வம் வெறுத்துவிடும்.

மனத்தூய்மையும், நேர்மையும், பொறுமையும், அன்பு முள்ளவனே மனிதனாவான்.

மனிதனுக்கு மிக்க கொடிய பகை பேராசை ஆகும்.

வெறுப்பும், கோபமும், பொறுமையும் மனிதனை உயிரை வைத்து எரித்துக்கொண்டிருக்கும்.

சகிப்புத் தன்மையுள்ளவன் வெற்றியுடன் வாழ்வான்.

அகம்பாவம் உள்ளவனிடம் அருள் சுரக்காது.

அஞ்ஞானி பிறரை சதா குறை கூறிக் கொண்டே இருப்பான்.

பிறருக்கு நீ செய்யும் துரோகமானது உன்னை நீயே கெடுத்துக் கொள்ளச் செய்யும் காரியமாகும்.

மமதையுள்ளவன் கடமைகளைச் சரிவரச் செய்யமாட்டான்.

பொறுமைப் படுபவன் அரை விநாடிகூட நிம்மதியாக இருக்க முடியாது.

பொறுமைக்காரனைக் கண்டு அஷ்ட லக்ஷ்மியும் விலகிவிடுவாள்

உலகத்தோடு ஒத்து வாழத் தெரியாதவன் மிகப் பெரிய கேட்டையும், நஷ்டத்தையும், தீராத் துயத்தையும் அடைந்தே தீருவான்.

ஆசை புற்று நோய்க்குச் சமானமாகும்.

பற்றுள்ளவனைப் பாவம் உறுதியாகப் பற்றிக்கொண்டு விடுகிறது.

ஆசையுள்ள மனிதன் ஆயிரம் கோடி ஜன்மம் எடுத்தாலும் ஆத்மாவை அறிந்துகொள்ள முடியாது.

உனக்கு ஹித சத்ரு ஆசைதான். ●

---

● காசி விசுவநாதர் கோயிலுக்கு நாள்தோறும் இருமுறை பூசை, அபிஷேக, அலங்காரப் பொருள்கள் நகரச் சத்திரத்திலிருந்து அனுப்பப்படுகின்றன.

● அமெரிக்காவிலிருந்து "ஸ்ரீ கிருஷ்ண கான்ஷியஸ்னெஸ்" சந்நியாஸி கோஷ்டியார் நால்வர் மதுரைக்கு அண்மையில் விஜயம் செய்து ஹரே கிருஷ்ண ஹரே ராம முதலிய நாம சங்கீர்த்தனங்கள் செய்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணசமாஜம், ஸ்ரீ அருள்ஜோதி மாதர் சங்கம் இவைகளின் ஆதரவில் இந்நிகழ்ச்சி நடைபெற்றது.

● தென் பிராந்திய ராணுவ மேஜர் ஜெனரல் ஸ்ரீ K. A. S. ராஜா அவர்கள் குடும்பத்துடன் 24—11—72ல் பழநிக்கு விஜயம் செய்து ஸ்ரீ ஞான தண்டாயுதபாணியை பக்தியுடன் வணங்கினர். தங்கரத புறப்பாடு வரை இருந்து தரிசித்தார். கோயில் நிர்வாகம் சிறப்பாக இயங்குவதை அவர் பாராட்டினர்.

---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: சொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17